# தமிழ் அரிச்சுவடி

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |
| ஆய்த எழுத்து ஃ | | | | | | | | | | | | |

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல்செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.

# முன்னுரை

பண்பும் அறிவும் வலிமையும் நிறைந்த பிள்ளைகளே வியத்தகு தேசத்தின் எதிர்பார்ப்பாகும். இதனை நிறைவேற்றத்தக்கதாக இலங்கை சனநாயகச் சோசலிசக் குடியரசு இந்நூலை உங்களிடம் வழங்குகின்றது.

இந்நூலை நன்றாகப் பயன்படுத்தி உங்கள் வாழ்க்கையை ஒளிமயமாக்கும் அதேவேளை அடுத்த ஆண்டில் இத்தரத்திற்கு வரும் சகோதரர்களுக்காக இந்நூலைப் பாதுகாப்பதும் உங்கள் கடமையாகும்.

உங்களிடம் வழங்கப்படும் இந்நூலை உங்கள் ஆப்த நண்பனாகக் கருதுவதன் மூலம் நாட்டிற்குப் பயன்படும் பிரசையாக அமையும் பாதையில் நீங்கள் பிரவேசிப்பீர்கள். இப்பாதையில் நீங்கள் பிரவேசிக்கின்றமையால், இலங்கை மென்மேலும் அபிவிருத்தியடையும் என்பதில் ஐயமில்லை. அது மாத்திரமன்று ஏழு கடலுக்கு அப்பால் உள்ள உலகை வெல்வதற்கும் இந்நூலின் மூலம் உங்களுக்கு வழங்கப்படும் அறிவு, மனப்பாங்குகள், திறன்கள், தேர்ச்சிகள் ஆகியன உதவும். ''கீழைத்தேய உலகின் மினுங்கும் முத்தின்'' பிரகாசம் உங்களால் மென்மேலும் அதிகரிக்கும்.

இந்நூலை வெளியிடுவதில் தமது தொழினுட்ப அறிவைப் பங்களிப்புச் செய்து நேரத்தையும் அர்ப்பணிப்புச் செய்த எழுத்தாளர்கள், பதிப்பாசிரியர்கள், பாடநூல் மதிப்பீட்டுச் சபை உறுப்பினர்கள் ஆகியோருக்கும் ஒத்துழைப்பை நல்கிய ஏனையோருக்கும் எனது நன்றி உரியது.

டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்,
''இசுருபாய''
பத்தரமுல்ல
2010.05.13

# அறிமுகம்

இலங்கை அரசு அறிமுகம் செய்துள்ள கலைத்திட்டச் சீர்த்திருத்தங்களின் அடிப்படையில், தரம் 6 இற்குரிய 'சைவ நெறி' பாடத்திட்டத்திற்கு அமைவாக, இப்பாடநூல் உருவாக்கப்பட்டுள்ளது.

புதிய கல்விச் சீர்த்திருத்தத்தின்படி கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகள் மாணவர்களுக்கு மகிழ்ச்சி தருவனவாக இருத்தல் அவசியம் ஆகும். அதற்கேற்ப இந்நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது. மேலும் மாணவரது வயதாட்டம், வகுப்புமட்டம் என்பவற்றுக்குப் பொருந்தும் வகையிலும் பாடத்திட்டத்தில் உள்ள தேர்ச்சி, தேர்ச்சிமட்டம் என்பவற்றை அடையும் வகையிலும் உள்ளடக்கம், படங்கள், செயற்பாடுகள், பாடசுருக்கம் என்பன உள்ளடக்கப்பட்டுள்ளன. மாணவர்கள் சைவ நெறிப் பாடத்தை அறிவுக்காக மட்டும் கற்பாது, அவர்களது வாழ்வில் நீண்டநாள் நிலைத்திருக்கும் வகையிலான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இப் பாடநூலில் இடம்பெற்றுள்ள கதைகள், விளக்கங்கள், திருமுறைப் பாடல்கள் யாவும் மாணவரின் சமய அறிவு, விழுமியப் பண்பு, சுயமதிப்பீடு, சிந்தனைத்திறன் என்பவற்றுடன் அவர்களது மொழி ஆற்றலை வளர்க்கும் வகையிலும் அமைக்கப்பட்டுள்ளன.

இந்நூலை உரிய காலத்தில் எழுதி முடிப்பதற்குப் பல்வேறு வழிகளிலும் ஆலோசனை வழங்கியும் தமது நிறுவனத்தின் வளங்களைத் தந்துதவியும் பேருதவி புரிந்த அரசாங்க அச்சகக் கூட்டுத்தாபனத்துக்கு எமது நன்றியை உரித்தாக்குகின்றோம்.

இப்பாடநூலை வழுவின்றிக் கணினி எழுத்தமைப்புச் செய்தவருக்கும் இதில் உள்ள அட்டைப்படம் உட்பட சகல சித்திரங்களையும் வரைந்து உதவியவருக்கும் எமது நன்றி

இப்பாடநூலை, மேலும் மேம்படுத்துவதற்கு உங்களின் ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வரவேற்கப்படுகின்றன.

- **நூலாக்கக் குழு** -

**கண்காணிப்பும் மேற்பார்வையும் - மீளப்பதிப்பு 2010**

திரு.டபிள்யூ.எம்.என்.ஜே.புஷ்பகுமார
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**வழிகாட்டல்**

திரு.திஸ்ஸ ஹேவாவிதான
பிரதி ஆணையாளர் (திட்டமிடல்)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**இணைப்பாளர் - 2010**

திரு- லெனின் மதிவானம்
உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்

**எழுத்தாளர் குழு**

திருமதி. கமலாம்பிகை கிருஸ்ணபிள்ளை
இ . ஆ. சே. தரம் II

**இணைப்பாளர்**

திரு. சி. காண்டீபன்
அபிவிருத்தி அலுவலகர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**சித்திரம்**

திரு. என. எஸ். ஞானகுருபரன்

# உள்ளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | விநாயகர் | 01 |
| 2. | கடவுள் | 05 |
| 3. | வீட்டில் சைவம் | 09 |
| 4. | நித்திய கருமங்கள் | 12 |
| 5. | சமய விழுமியங்கள் | 15 |
| | (அ) உண்மை பேசுவோம் | 18 |
| | (ஆ) அன்பு செலுத்துதல் | 21 |
| | (இ) பெரியோரைக் | 24 |
| | (ஈ) கனம்பண்ணுதல் | 26 |
| | (உ) தன்னம்பிக்கையைவளர்த்தல் | 28 |
| 6. | வாழ்வியல் சடங்குகள் | 32 |
| 7. | விரதங்கள்களும் பண்டிகைகளும் | 35 |
| 8. | திருக்குறிப்புத் தொண்ட நாயனார் | 37 |
| 9. | கண்ணப்ப நாயனார் | 37 |
| 10 | பஞ்சபுராணம் | 41 |
| | (அ) திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரம் | 43 |
| | (ஆ) திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் | 44 |
| | (இ) சுந்தர மூர்த்தி நாயனார் தேவாரம் | 46 |
| | (ஈ) திருவாசகம் | 48 |
| | (உ) திருவிசைப்பா | 49 |
| | (ஊ) திருப்பல்லாண்டு | 50 |
| | (எ) பெரிய புராணம் | 51 |
| 11. | தோத்திரப் பாடல் - திருப்புகழ் | 53 |
| 12. | ஆலய வழிபாடு | 55 |
| 13. | சைவசமய குரவர் நால்வர் | 58 |
| 14. | ஞானப்பிரகாச முனிவர் | 63 |
| 15. | ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் | 65 |
| 16. | முப்பொருள் | 68 |
| 17. | ஈழத்துச் சைவமரபு | 70 |
| 18. | விநாயகர் ஆலயங்கள் | 73 |
| 19. | திருக்கோணேச்சரம் | 75 |
| 20. | கதிர்காமம் | 78 |
| 21. | இலங்கையில் உள்ள சமயங்கள் | 81 |

# 1 விநாயகர்



விநாயகப் பெருமானை முதலில் வழிபட்டு, எந்தச் செயலையும் செய்யத் தொடங்குவது மரபாகும். அவரை வணங்கி, செயலைத் தொடங்கினால் அது சித்திக்கும் என்பது சைவ சமயத்தவர்களது நம்பிக்கையாகும். அதனால் வழிபாட்டின் போது, முதற் பூசை அவருக்கே உரியதாகின்றது. நாமும் விநாயகரை முதலில் வணங்கி, பாடத்தைப் படிப்போம்.

'விநாயகர்' என்ற சொல்லுக்குத் தனக்கு மேல் தலைவர் இல்லாதவர் என்பது பொருள், தம்மை வணங்குவோருக்கு விக்கினங்கள் நேராது காப்பதனால் அவர், 'விக்னேஸ்வரர்' எனவும் அழைக்கப்படுகின்றார்.

'ஓம்' என்பது பிரணவ மந்திரமாகும். அந்த மந்திர வடிவினராக விளங்குபவர் பிள்ளையார். அதனால் எதனையும் எழுதத் தொடங்கும்போது, பிள்ளையார்சுழி (உ) இட்டு எழுதுவது வழக்கம். அதுவும் 'ஓம்' என்னும் மந்திரத்தைக் குறிப்பதாகும்.

விநாயகப் பெருமானை ஆலயங்களில் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்கின்றனர். அத்துடன் வீடு, அரசமரத்தடி, ஆலமரத்தடி, ஆற்றங்கரை, குளக்கரை முதலான இடங்களிலும் அவருக்கு வழிபாடு இடம் பெறுகின்றது.

விநாயகப் பெருமானை நாம் இலகுவாக வழிபட முடியும். விநாயகர் திருவுருவம் இல்லாத இடத்தில், மஞ்சள், சந்தனம், சாணம் என்பவற்றில், ஏதாவது ஒன்றினால் பிள்ளையார் பிடித்து, அதில் அறுகம்புல்லை வைத்து வழிபடுவது எமது சமய மரபாகும்.

பிள்ளையாருக்கு முன் சிதறுதேங்காய் உடைத்தல், நெற்றியில் குட்டிக் கும்பிடுதல், தோப்புக்கரணம் போடுதல் முதலான வழிபாடுகளைச் செய்வர். பிள்ளையார் அருளால் தமது பாவங்கள், கஷ்டங்கள் சிதறுண்டு போவதற்காக, சிதறுதேங்காய் உடைத்து வழிபடுகின்றனர். பிள்ளையாரை வழிபடும்போது முட்டியாகப் பொத்திப் பிடித்த இரண்டு கைகளினாலும் வலது கை வலது நெற்றியிலும் இடது கை இடது நெற்றியிலும் பொருந்த நெற்றியில் மூன்று முறை குட்டி வழிபடுவர். அது நெற்றியில் குட்டிக் கும்பிடுதல் எனப்படும். அதனுடன் தொடர்புடைய புராணக்கதை ஒன்று உண்டு. அதன் சுருக்கத்தைப் படிப்போம்.

முன்னொரு காலத்தில் அகத்தியர் கையிலிருந்த கமண்டலத்தை, பிள்ளையார் காகமாக உருவெடுத்து வந்து கவிழ்த்தார். அதனால், கமண்டலத்தில் இருந்த காவிரி நீர் பெருக்கெடுத்து ஓடியது. அகத்தியர் கோபத்துடன் காகத்தைக் துரத்த, காகமாக இருந்த பிள்ளையார் சிறுவனாக மாறினார். அகத்தியர் அச்சிறுவனைப் பிடித்துக் குட்ட நினைத்தார், அப்போது பிள்ளையார் தனது உருவத்தை அகத்தியருக்குக் காட்டினார். அகத்தியர் தன்னை நொந்தார் விநாயகப் பெருமானைக் குட்ட ஓங்கிய கைகளால், தனது நெற்றியின் இருபக்கமும் ஓங்கிக் குட்டிக் கொண்டார். அத்துடன், அவ்வாறு நெற்றியில் குட்டி வழிபடுபவர்களுக்கு அருள்பாலிக்க வேண்டுமெனவும் பிள்ளையாரை வேண்டிக் கொண்டார். அதனால், நெற்றியில் மூன்று முறை குட்டி வழிபடுவது வழக்கமாகியது.

தோப்புக்கரணம் போடுதல் பிள்ளையாருக்கே உரிய சிறப்பான வழிபாட்டு முறையாகும். வலக்காதை இடக்கையினாலும், இடக்காதை வலக்கையினாலும் பிடித்துக் கொண்டு, மூன்று முறை தாழ்ந்தெழுந்து வழிபடுதல் தோப்புக்கரணம் போடுதல் எனப்படும். அதனுடன் தொடர்புடைய புராணக் கதை ஒன்று உண்டு.

முன்னொரு காலத்தில் கஜமுகன் என்னும் அசுரன் தேவர்களைத் தன் அடிமைகளாக்கினான். அவர்களைத் தன் முன் ஆயிரம் முறை தோப்புக்கரணம் போடச் செய்தான். தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். அவர் கஜமுகாசுரனின் செருக்கை அடக்க விநாயகரை அனுப்பினார். விநாயகர் கஜமுகாசுரனுடன் போர் புரிந்தார்; அவனது உடலைப் பிளந்தார். அவன் பெருச்சாளி உரு எடுத்து விநாயகரை எதிர்த்தான். விநாயகர் அவனுக்கு ஞான உபதேசஞ் செய்தார். அதனால், செருக்கடங்கிய அவன், விநாயகரைத் தொழுதான். அவர் பெருச்சாளியைத் தனது வாகனமாக்கிக் கொண்டார்.

தேவர்கள், கஜமுகாசுரனுக்குத் தோப்புக்கரணம் போட்ட நிலை மாறி, அவர்கள் விநாயகருக்கு முன் அவ்வாறு செய்யத் தொடங்கினர். விநாயகர் மகிழ்ந்து. ''இனி என் முன் மூன்று முறை தோப்புக்கரணம் போட்டால் போதும்; அவ்வாறு செய்யும் பக்தர்கள் எனது அருளுக்குப் பாத்திரமாவார்கள்'' என்று அருளினார். அதனால், விநாயகருக்கு முன் தோப்புக்கரணம் போட்டு வணங்கும் மரபு ஏற்பட்டது.

விநாயகரை வணங்குவதால் எமது இடையூறுகள், துயர்கள் நீங்கும்; வினைகள் வேரோடு அழியும்; சிறந்த கல்வி, அறிவு பெருகும்; விரும்பியது கிடைக்கும். நாமும் விநாயகரை வழிபடும் போது, ''ஓம் ஓங்கார ரூபாய நமக'' என்ற மந்திரத்தைச் சொல்லி வழிபடுவோம். அவரின் நல்லருளைப் பெறுபோம்.

'விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்''

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நாம் செயல்களைத் தொடங்கும்போது எந்தக் கடவுளை முதலில் வணங்க வேண்டும்?
2. விநாயகர், 'விக்னேஸ்வரர்' என அழைக்கப்படக் காரணம் யாது?
3. 'ஓம்' என்னும் பிரணவ மந்திர வடிவான கடவுளின் பெயரைக் குறிப்பிடுக.
4. பிள்ளையார் வழிபாடு இடம் பெறும் இடங்கள் மூன்றினைக் குறிப்பிடுக.
5. விநாயகரை வழிபடுவதனால் கிடைக்கும் பயன்கள் நான்கினைத் தருக.

**02. கீழே தரப்பட்டுள்ள சொற்களை வைத்து, வெற்றிடங்களை நிரப்புக.**

விநாயகர், கஜமுகாசுரன், பிள்ளையார்சுழி, அகத்தியர், சிதறு தேங்காய்

1. எழுதத் தொடங்கும் போது .............................................. இட வேண்டும்.
2. .......................................... என்ற சொல்லுக்குத் தனக்கு மேல் தலைவர் இல்லாதவர் என்பது பொருளாகும்.
3. தமது கஷ்டங்கள், பாவங்கள் விலக, பிள்ளையார் முன் ............................. உடைத்து வழிபடுவர்.
4. தோப்புக்கரணம் போடுதலுடன் தொடர்புடைய கதை ................................. கதையாகும்.
5. நெற்றியில் குட்டிக் கும்பிடுதலுடன் தொடர்புடைய கதை, ............................ கதையாகும்.

## செயற்பாடு

1. ஆசிரியரின் உதவியுடன் மஞ்சள், சந்தனம், அரிசிமா, சாணம் என்பவற்றால் பிள்ளையார் பிடிக்கும் முறையினைச் செய்து பழகுக. அதில் அறுகம்புல்லை வைத்து வழிபாடு செய்க.

2. நெற்றியில் குட்டிக் கும்பிடுதல், தோப்புக்கரணம் போடுதல் என்பவற்றைச் சரியான முறையில் செய்து காட்டுக.

## பாடச்சுருக்கம்

- விநாயகப் பெருமானை முதலில் வழிபட்டுச் செய்யும் செயல் சித்திக்கும்.
- விநயாகர், தனக்கு மேல் வேறொரு தலைவரும் இல்லாதவர்.
- நாம் எழுதும் போது பிள்ளையார் சுழி இட்டு எழுத வேண்டும்.
- ஓம் என்பது பிரணவமந்திரம், அந்த மந்திரத்தின் வடிவானவர் பிள்ளையார்.
- விநாயகர் வழிபாடு ஆலயங்களிலும், வீட்டிலும், அரசமரத்தடி, ஆலமரத்தடி, குளக்கரை, ஆற்றங்கரை முதலிய இடங்களிலும் இடம் பெறுகின்றது.
- மஞ்சள், சந்தனம், அரிசிமா, சாணம் முதலானவற்றில் ஏதேனும் ஒன்றினால் பிள்ளையார் பிடித்து, அதில் அறுகம்புல்லை வைத்து வழிபடுவது மரபாகும்.
- நெற்றியில் குட்டிக் கும்பிடுதல், தோப்புக்கரணம் போடுதல் என்பன எமது ஆணவத்தை அடக்குவதைக் குறிப்பிடும் வழிபாட்டு முறைகளாகும்.
- விநாயகரை வணங்குவதனால் தீவினை அகலும், சிறந்த கல்வி, அறிவு பெருகும்.

# 2 கடவுள்

கடவுள் ஒருவரே உண்மையானவர்; எல்லாச் செயல்களுக்கும் அடிப்படையாக இருப்பவரும் அவரே. நாம் எல்லோரும் கடவுளின் படைப்புகள். கடவுளின் இயல்புகளை அறிந்து கொள்ள நாம் அனைவரும் பின்வரும் வாக்கியங்களைப் படிப்போம்.

## கடவுள்

கடவுள் ஒருவர் இருக்கிறார்
கடவுள் எங்கும் இருக்கிறார்
கடவுள் எல்லாம் அறிபவர்
கடவுள் எல்லாம் வல்லவர்
கடவுள் இரக்கம் உடையவர்
கடவுள் நம்மைக் காக்கிறார்
கடவுளை ஒரு காலமும் மறவாதே
கடவுளை எந்நாளும் வணங்கு

- பாலபாடம்

கடவுள் எங்கும் இருக்கிறார்; அவர் இரக்கம் உடையவர்; அவர் நம்மைக் காக்கிறார். இத்தகைய இறைவனின் இயல்புகளை விளக்கும் செம்மனச் செல்வியின் கதையை இப்போது படிப்போம். தமிழகத்திலே மதுரைக்கு அண்மையில் வைகை என்ற நதி ஓடுகின்றது. ஒருமுறை அந்த நதி பெருக்கெடுத்து ஓடியது. வெள்ளம் எங்கும் பாய்ந்தது.



வெள்ளம் காரணமாக, அங்கு வாழ்ந்த மக்கள் கஷ்டமடைந்தனர். வீடு, பொருட்கள், கால்நடைகள் முதலானவற்றை இழந்தனர். அரசன், மக்களின் துன்பத்தை அறிந்தான்; வைகை நதியின் கரையில் அணைகட்டும் படி மக்களுக்குக் கட்டளை இட்டான். அதனால், ஒவ்வொரு வீட்டினருக்கும் ஒவ்வொரு பங்கு அளந்துவிடப்பட்டது. எல்லோரும் மண்வெட்டி, கூடை என்பவற்றை எடுத்துக் கொண்டு வைகை நதிக்கரைக்குச் சென்றனர். அவர்கள் தத்தமது பங்குகளைக் கட்டி முடித்தனர்.

மதுரையில் செம்மனச் செல்வி என்னும் மூதாட்டி வாழ்ந்து வந்தார். அவர் மிகவும் ஏழை; அவருக்கு உறவினர் யாருமே இல்லை. அவர் பிட்டு அவித்து விற்று, வாழ்க்கை நடத்திவந்தார். அவர் சிவபெருமானிடம் மிகுந்த பக்தி கொண்டவர். நாள்தோறும் கோயிலுக்குச் சென்று வழிபடுவார்.

பாவம்! அந்த மூதாட்டி, வைகை ஆற்றின் ஒரு பங்கை அவரும் கட்ட வேண்டியிருந்தது. அவரால் அரசனின் கட்டளையை மீற முடியவில்லை. கூலியாள் யாரும் கிடைத்தால் தனது பங்கைக் கட்டி முடிக்கலாம் என்று தேடிப் பார்த்தார். யாருமே கிடைக்கவில்லை. அதனால், அவர் மிகுந்த துக்கமடைந்தார் 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என நினைத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்றார். சிவபெருமானிடம் தனது துன்பத்தை நீக்குமாறு வேண்டினார். மூதாட்டியின் வழிபாட்டிற்குப் பலன் கிடைத்தது.

சிவபெருமான் இரக்கம் உடையவர் அல்லவா? அவர் தமது அடியவரைக் காக்க நினைத்து, கூலியாளாக வந்தார். மூதாட்டி தனது பங்கைக் கட்டித் தரும்படி கூலியாளிடம் கேட்டார். கூலியாள் 'பசிக்கிறது' என்று கூறி, மூதாட்டியிடம் பிட்டு வாங்கி உண்டார். பின்னர், மூதாட்டியின் பங்கை அடைக்கச் சென்றார்.

கூலியாள் வைகை நதிக் கரையை அடைந்தார். ஒரு கூடை மண்ணைக் கொண்டு போய்க் கரையில் கொட்டுவார். களைப்படைந்தவர் போல் கொன்றை மரநிழலில் நித்திரை செய்வார். கந்தைத் துணியில் தாம் கட்டி வந்த பிட்டை எடுத்து உண்பார். அவ்வாறு விளையாட்டாகப் பொழுது போக்கினார். மூதாட்டியின் பங்கு மட்டுமே கட்டி முடிக்கப்படவில்லை.



அரசன் வைகை நதிக்கரைக்கு வந்தான். மூதாட்டியின் கூலியாள், குறிப்பிட்ட பங்கை கட்டி முடிக்காததைக் கண்டான். அரசனுக்குக் கோபம் வந்தது; நித்திரை செய்த கூலியாளுக்குப் பிரம்பால் அடித்தான்.



கூலியாளாக வந்த சிவபெருமான் ஒரு கூடை மண்ணை உடைப்பு இருந்த இடத்திலிட்டு மறைந்தருளினார். வைகைக்கரையும் அடைபட்டது. கடவுள் எங்கும் இருப்பவர் அல்லவா? அரசன் அடித்த அந்த அடி எல்லோர் முதுகிலும் பட்டது. கூலியாளாக வந்தவர் சிவபெருமானே என்பதனை எல்லோரும் அறிந்தனர். அவர்கள் மண் சுமந்த பெருமானையும், அவரை மண் சுமக்கச் செய்த செம்மனச் செல்வியையும் போற்றி வணங்கினர்.

'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'

## கடவுளியல்

01. உலகத்துக்குக் கருத்தா யாவர்?

சிவபெருமான்

02. சிவபெருமான் எப்படிப்பட்டவர்?

என்றும் உள்ளவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிபவர்; எல்லாம் வல்லவர்.

03. சிவபெருமான் ஆன்மாக்களுக்காகச் செய்யும் தொழில்கள் எவை?
படைத்த, காத்தல், அழித்தல் என்னும் மூன்றாம்

04. சிவபெருமான் ஆன்மாக்களுக்காகச் செய்யுந் தொழில்களை எதைக் கொண்டு செய்வார்?

தமது சக்தியை கொண்டு செய்வார்.

05. சக்தி என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

வல்லமை

- முதலாம் சைவ வினாவிடை

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கடவுளின் இயல்புகள் நான்கினைத் தருக.
2. கடவுளின் இயல்புகளை அறிய உதவும் கதையின் பெயர் யாது?
3. இறைவன் ஏன் கூலியாளாக வந்தார்?
4. இந்தக் கதையில், கடவுள் ஒருவரே உண்மை, அவர் எங்கும் இருக்கின்றார் என்பவற்றை விளக்கும் பகுதி எது?
5. சிவபெருமான் ஆன்மாக்களுக்காகச் செய்யும் தொழில்கள் எவை?

**02. தரப்பட்ட சொற்களை வைத்து, கீறிட்ட இடங்களை நிரப்புக.**

சக்தி, செய்வம், கருத்தா, இறைவன்

1. திக்கற்றவர்க்குத் .................................. துணை.
2. .................................. செம்மனச் செல்விக்காகக் கூலியாளாக வந்தார்.
3. உலகத்துக்குக் .................................. சிவபெருமான்.
4. .................................. என்னும் சொல்லுக்குப் பொருள் வல்லமை

## செயற்பாடு

1. கடவுளின் இயல்பை விளக்கும் வாக்கியங்களை மனனம் செய்க. அதனைத் தனியாகவும் குழுவாகவும் வகுப்பறையில் கூறுக.
2. செம்மனச் செல்வியிடம் காணப்பட்ட இரண்டு நற்பண்புகளை எழுதுக.
3. சிவபெருமான், உயிர்களுக்காக அருள்புரிந்த வேறு ஒரு கதையினைக் கூறுக.

### பாடச்சுருக்கம்

- கடவுள் ஒருவரே உண்மையானவர் என்பதை வாக்கியங்கள், கதை, வினாவிடை முதலான ஆதாரங்கள் ஊடாகக் கற்றீர்கள்.
- செம்மனச்செல்வியின் கதையின் மூலம் கடவுள் ஒருவரே உண்மையானவர். அவர் எங்கும் இருப்பவர்; எல்லாம் அறிபவர்; எல்லாம் வல்லவர்; இரக்கம் உடையவர்; கடவுள் நம்மை காப்பவர் என்னும் உண்மைகளை அறிந்து கொண்டீர்கள்.
- செம்மனச்செல்வி கடவுளிடம் மிகுந்த பக்தி கொண்டவர், நாள்தோறும் கோயிலுக்குச் சென்று வழிபடுவார். அதனால் கடவுளின் அருளைப் பெற்றார்.
- கடவுள் எல்லாம் வல்லவர், அதனால் செம்மனச் செல்விக்குக் கூலியாளாக வந்து, மண் சுமந்தார். கடவுள் எங்கும் இருப்பவர். அதனால் தான் அவர் மீது பட்ட அடி எல்லோர் மீதும் பட்டது.

# 3 வீட்டில் சைவம்

நாம் அன்றாட வாழ்கையில் பல சைவப் பழக்க வழக்கங்களைக் கடைப் பிடிக்கின்றோம். அவற்றில் வீட்டில் கடைப்பிடிக்கும் சைவப் பழக்க வழக்கங்கள் சரியான முறையில் பயிற்சியுடன் கூடியதாக அமைய வேண்டும். அப்போதுதான் கோயில், பாடசாலை போன்ற பொது இடங்களிலும் நற்பண்பு உள்ளவர்களாக நாம் விளங்க முடியும்.

வீட்டில் அன்றாடம் கடைப்பிடிக்கக்கூடிய சைவப் பழக்க வழக்கங்கள் பற்றி முலில் அறிந்து கொள்ளுவோம். விபூதி தரித்தல், விளக்கேற்றுதல், கடவுளை வணங்குதல் என்பன அவற்றுட் சிலவாகும்.

தினமும் காலையில் நீராடி, திருநீறு தரித்து, சுவாமி அறையில் பூவும் நீரும் வைத்து, விளக்கேற்றி, தூப தீபம் காட்டி, தோத்திரம் ஓதி கடவுளை வழிபடுதல் நல்ல பழக்கமாகும். மாலையிலும் முகம், கை, கால்கள் என்பவற்றைக் கழுவிய பின் அல்லது நீராடிய பின் கடவுளை வழிபடுதல் வேண்டும்.



வெள்ளிக்கிழமை தோறும் மாலை வேளைகளில் வீட்டிலுள்ள அனைவரும் ஒன்றிணைந்து, வழிபடுதல் வேண்டும். அவ்வேளையில் பஞ்சபுராணம் ஓதுதல் கூட்டுப் பிரார்த்தனை செய்தல் என்பவற்றை மேற்கொள்ளுதல் நன்று.



வெள்ளிக்கிழமை, தைப்பொங்கல் புதுவருடப்பிறப்பு மற்றும் விரத நாட்களிலும் நாம் கடைப்பிடிக்க வேண்டிய சைவப் பழக்க வழக்கங்கள் பல உள்ளன. அவ்வகையில் வீட்டையும் சுற்றாடலையும் சுத்தம் செய்தல், புனிதம் பேணுதல், இறை வழிபாடு செய்தல், பிரார்த்தனை செய்தல் என்பவற்றைச் செய்ய வேண்டும். பண்டிகை நாட்களில் மேற்கூறியவற்றுடன் கோலம் போடுதல், நிறைகுடம் வைத்தல், மாவிலை தோரணம் கட்டுதல் முதலானவையும் இடம்பெறும். இச் செயல்கள் வீட்டிற்குத் தெய்வீகப் பொலிவையும் நமக்குக் காரிய சித்தியையும் ஏற்படுத்தும்.

மேலும், இத்தகையை சைவப் பழக்கவழக்கங்கள் தொடர்ச்சியாகப் பேணப்பட வேண்டியவை ஆகும். அதற்காக, நாம் முதலில் வீட்டையும் வீட்டுச் சூழலையும் புனிதமாக வைத்திருப்போம். அவ்வாறே, விசேட தினங்களின் போது சமயச் செயற்பாடுகளில் ஈடுபடுவோம். அவற்றை எமது இளைய சந்ததியினருக்கும் பயிற்றுவிப்போம்.

**'காலையும் மாலையும் கடவுளை வணங்கு'**

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. நீங்கள் அன்றாடம் வீட்டில் கடைப்பிடிக்கும் சமயப் பழக்க வழக்கங்கள் ஐந்தினைக் குறிப்பிடுக.
2. விசேட தினங்களின்போது வீட்டில் பின்பற்றக்கூடிய சமயப் பழக்க வழக்கங்கள் நான்கினைத் தருக.
3. சரியான வகையில் சமயப் பழக்க வழக்கங்களைக் கடைப்பிடிப்பதனால் பெறக்கூடிய நன்மைகளைக் குறிப்பிடுக.

**02. பின்வரும் செயற்பாடுகளை வகுப்பறையில் செய்து காட்டுக.**

அ. நிறைகுடம் வைத்தல்

ஆ. தோரணம் கட்டுதல்

இ. மாவிலை கட்டுதல்

ஈ. கோலம் போடுதல்

## செயற்பாடு

1. நீங்கள் சித்திரைப் புதுவருடப்பிறப்பின் போது வீட்டில் பின்பற்றிய சமயப் பழக்க வழக்கங்களைக் குறிப்பிடுக.

### பாடச்சுருக்கம்

- வீட்டில் சைவ சமயப் பழக்க வழக்கங்களை அன்றாடமும் விசேட தினங்களிலும் பின்பற்றுகின்றோம்.
- சமயப் பழக்க வழக்கங்களை பின்பற்றுவதனால் பல நன்மைகள் கிடைக்கும்.
- சமயப் பழக்க வழக்கங்கள் தொடர்ச்சியாகப் பேணப்பட வேண்டியவை ஆகும்.

# 4 நித்திய கருமங்கள்

நாம் எமது வாழ்வில் நாளாந்தம் செய்யும் செயற்பாடுகள் நித்திய கருமங்கள் எனப்படும். அவற்றைச் செய்யும்போது இறை சிந்தனையுடன் செய்ய வேண்டும். நாம் செய்யக்கூடிய நித்திய கருமங்கள் பல உள்ளன. அவற்றுள் சிலவற்றைத் தெரிந்து கொள்ளுவோம்.

நாம் கடவுளுடைய படைப்புக்கள். அவர் அருளால் நாம் வாழ்கிறோம். கடவுளிடம் மிகுந்த பக்தி உடையவர்களாக இருந்தால் அவர் அருள் நமக்குக் கிடைக்கும். நாள்தோறும் பலமுறை அவரை நினைக்க வேண்டும். அவ்வாறு இறைவனை நினைப்பதற்கு ஏற்ற வழிமுறைகளை நம் முன்னோர் ஒழுங்குபடுத்தி உள்ளனர்.

அதிகாலையில் சூரியன் உதிப்பதற்கு முன் நித்திரை விட்டெழுதல் வேண்டும். எழும்பும் போது இறைவனை நினைத்துக் கொண்டு எழும்புதல் வேண்டும். பின் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு, நீராடி, தூய ஆடை அணிதல் வேண்டும். அதன் பின் விபூதி, உருத்திராக்கம் முதலான சிவ சின்னங்களைச் சிவசிந்தனையுடன் தரித்துக் கொண்டு, இறைவனை வழிபடல் வேண்டும். விபூதியை உத்தூளனமாகவேனும் (பரவிப் பூசுதல்), திரிபுண்டரமாகவேனும் (மூன்று குறிகளுடன் பூசுதல்) தரித்தல் வேண்டும்.

இறைவனை வழிபடும்போது சுவாமி அறையில் அல்லது அதற்குரிய இடத்தில் விளக்கேற்றி, பூக்களை வைத்து, தூப தீபங்களைக் காட்டி, திருமுறைப் பாடல்களைப் பாடி வழிபடுதல் வேண்டும். வழிபாட்டின் போது நமக்காக இறைவனிடம் பிரார்த்திக்கின்றோம். அவ்வாறே குடும்பத்தவர், அயலவர், நண்பர் அனைவரும் நலமாகவும், நல்லவர்களாகவும் வாழப் பிரார்த்திக்க வேண்டும். இறைவன், குழந்தைகளின் பிரார்த்தனைகளுக்குச் செவி-மடுப்பவர். அதனால் நீங்கள், அவரிடம் நல்லவற்றை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

நாம் காலையும் மாலையும் இறைவனை வழிபடுகின்றோம் அல்லவா? அவ்வாறு, காலையும் மாலையும் இறைவனை வழிபட்ட பின், பெற்றோரின் கால்களில் வீழ்ந்து வணங்குதல் வேண்டும். அதனை வாழ்வில் பழக்கமாகக் கொள்ள வேண்டும். பெற்றோர் எமது கண்கண்ட தெய்வங்கள் ஆவர், அவர்களது ஆசீர்வாதம் எம்மை நன்கு வாழ வைக்கும்.

நித்திய கருமங்களில் புனிதம் பேணுதல் நல்ல செயலாகும், வழிபாடு செய்யும் இடங்களை மட்டுமன்றி, வீட்டின் எல்லா இடங்களையும் புனிதமாக வைத்திருக்கப் பழக வேண்டும். அதற்கு வீட்டிலுள்ள பெரியோர்களுடன் இணைந்து, நீங்களும் உதவி புரிய வேண்டும்.

உணவு உண்ணத் தொடங்கும் முன்பும் இறைவனின் நினைந்து வணங்க வேண்டும். உணவு உண்ணத்தொடங்கும் போது பாடக்கூடிய திருமுறைப் பாடல்கள் சைவத் திருமுறை களில் உள்ளன. ''அன்னம் பாலிக்கும்.....'' என்னும் தேவாரமும் ''மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்......'' என்னும் பெரியபுராணப் பாடலும் அவற்றுட் சிலவாகும்.

நாம் உண்ணும் உணவில் ஒரு பகுதியை பசு, காகம், கோழி முதலிய பிராணிகளுக்கு இடுதல் நல்ல பண்பாகும். இவற்றுடன், உண்ணும்போது வீண் வார்த்தைகளைப் பேசாதிருத்தல் வேண்டும். உணவை வீணாக்குதல் கூடாது.





நாம் சிறியவர்களாக இருக்கும்போதே, பெற்றோரின் உதவியுடன் தருமச் செயல்களில் ஈடுபட வேண்டும். நாள்தோறும் இல்லாவிட்டாலும் குறிப்பிட்ட நாட்களில் இறை அர்ப்பணமாக அடியவர்கள், ஏழைகள், அகதிகள் முதலானவர்களுக்கு உணவளித்தல், ஆதரவளித்தல் முதலான தருமச் செயல்கள் ஈடுபட வேண்டும். இது எமது சமூகக் கடமையாகும்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நித்திய கருமங்கள் என்றால் என்ன?
2. கடவுளின் அருளை நாம் எவ்வாறு பெற்றுக் கொள்ளலாம்?
3. சிவசின்னங்களைக் குறிப்பிடுக.
4. நீங்கள் உங்களைத் தவிர, வேறு யார் யாருக்காகப் பிரார்த்தனை செய்வீர்கள்?
5. உணவு உண்ணும் போது கடைப்பிடிக்க வேண்டிய விடயங்கள் இரண்டு தருக.

**02. கீழே கொடுக்கப்பட்ட சொற்களைக் கொண்டு, வெற்றிடங்களை நிரப்புக.**

இறைசிந்தனையுடன், பெற்றோர், படைப்புக்கள், கடவுளை, தேவாரம்

1. நாம் கடவுளுடைய ........................................................................ ஆவோம்.
2. செயல்களை ........................................................................ செய்ய வேண்டும்.
3. காலையும், மாலையும் ........................................................ வணங்க வேண்டும்.
4. உணவு உண்ண முன் ''அன்னம் பாலிக்கும்'' என்ற ........................................ பாடுவோம்.
5. நாம் ........................................................................ காலில் விழுந்து வணங்குவோம்.

## செயற்பாடு

1. நித்திரை விட்டெழும்புதல் தொடக்கம் பாடசாலை செல்லும் வரை நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலையும் ஒழுங்கு முறைப்படி எழுதுக.
2. 'புனிதம் பேணுதல்' பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
3. நீங்கள் செய்த தருமச் செயல்கள் பற்றி, இரண்டு நிமிடங்கள் பேசுக.
4. ஆசிரியரின் உதவியுடன் "**அன்னம் பாலிக்கும்.......**" என்னும் தேவாரத்தையும் "**மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்......**" என்னும் பெரியபுராணப் பாடலையும் எழுதிக் காட்சிப்படுத்துக.
5. நலம் தரும் பிரார்த்தனை ஒன்றினை எழுதி, அதனை வகுப்பறையில் எல்லோரும் சேர்த்து கூறுக.

### பாடச்சுருக்கம்

- நாளாந்தம் செய்யும் செயல்கள் நித்திய கருமங்கள் எனப்படும்.
- நாம் இறை சிந்தனையுடன் செயல்களைச் செய்ய வேண்டும்.
- இறைவனை நினைத்தல், சிவசின்னங்களைத் தரித்தல், பிரார்த்தனை செய்தல், தருமம் செய்தல், புனிதம் பேணுதல், உணவு உண்ணுமுன் திருமுறை ஓதுதல், காலையும், மாலையும் கடவுளையும், பெற்றோரையும் வழிபடுதல் - ஆகியவை நாம் நாள்தோறும் செய்ய வேண்டிய கருமங்களாகும்.

# 5 சமய விழுமியங்கள்

மனித வாழ்வை மேம்படுத்தக் கடைப்பிடிக்கப்படும் பெறுமதிமிக்க வாழ்க்கைப் பண்புகள் விழுமியங்கள் எனப்படும். அவற்றுள் சமயம் சார்ந்த மனிதப் பண்புகள் சமய விழுமியங்கள் ஆகும். அத்தகைய பண்புகளுள் சிலவற்றைச் சுருக்கமாக நோக்குவோம்.

## (அ) உண்மை பேசுவோம்

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் எழுதிய நூல்களில் பாலபாடமும் ஒன்றாகும். அவரது இரண்டாம் பாலபாடத்தில் 'மெய்ம்மை' என்னும் கதை உள்ளது. அக்கதை சமய விழுமியப் பண்புகளில் ஒன்றான உண்மை பேசுதலின் சிறப்பினைப் பற்றி விளக்குகின்றது. அக்கதையினை 'உண்மை பேசுவோம்' என்ற தலைப்பின் கீழ் படிப்போம்; நாமும் உண்மையைப் பேசுவோம்; நன்மையைப் பெறுவோம்.

ஒரு நாள் விடியற்காலையில் முருகன், கிருஷ்ணன் என்னும் பெயர்களை உடைய இரண்டு சிறுவர்கள் ஒரு சந்தைக்குப் போய், தங்களுடைய சிறிய கடைகளில் தாங்கள் கொண்டுபோன பொருள்களைப் பரப்பிவைத்து, விற்பதற்காக உட்கார்ந்தார்கள். ஒரு கடையில் பழங்களும் காய்கறிகளும், மற்றொன்றில் தேங்காயும் வைக்கப்பட்டிருந்தன. சந்தை கலைந்தது. இந்தச் சிறுவர்களிடமும் பல பேர் பொருள்கள் வாங்கிக் கொண்டு போனார்கள்.

முருகனுடைய கடையில் எல்லாம் விற்றுக் கடைசியாய் ஒரு முலாம்பழம் மாத்திரம் இருந்தது, ஒரு பெரியமனிதர் வந்து, கையை அந்த முலாம்பழத்தின் மேல் வைத்து. ''எவ்வளவு பெரிய முலாம்பழம்! இதற்கு என்ன விலை? என்று கேட்டார்.

''இந்த முலாம்பழம் ஒன்றுதான் என்னிடத்தில் மிகுந்தது; இது நல்ல பழம்போல் தோன்றினாலும் இதில் கொஞ்சம் பழுது இருக்கின்றது ஐயா'' என்று சொல்லி, சிறுவன் அந்தப் பழத்தை மறுபுறம் திருப்பிக் காட்டினான். ''ஆமாம்! பழுது இருக்கின்றது! எனக்கு அது வேண்டாம்'' என்று சொல்லி, அந்தப் பெரியமனிதர் அந்தச் சிறுவனுடைய அழகிய வஞ்சகமில்லாத முகத்தைப் பார்த்து. ''உன்னுடைய பழத்திலுள்ள பழுதை வாங்க வருபவர்களுக்குக் காட்டுவது, விற்க வந்த உனக்கு ஆகுமா? என்று கேட்டார்.

''பொய் சொல்வதைப் பார்க்கிலும் இது நல்லது. ஐயா'' என்று அந்தச் சிறுவன் பணிவுடன் சொன்னான் ''நீ சொன்னது சரி, தம்பீ, ஒருபோதும் அதை மறவாதே; நான் உன்னுடைய கடையை இனி மறவேன்'' என்று சொல்லி அந்தப் பெரியமனிதர் கிருஷ்ணன் கடைப்பக்கம் திரும்பி, ''இது என்ன நல்ல பழத்தேங்காயா?'' என்று கேட்டார். ''ஆம், ஐயா, நல்ல பழக்காய். நேற்றுத்தான் பிடுங்கினது. நான்தான் உரித்தேன்'' என்று கிருஷ்ணன் மறுமொழி சொன்னான். அந்தப் பெரியமனிதர் அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போனார்.

''முருகா, நீ பெரிய மூடன்; முலாம் பழத்திலுள்ள பழுதை அந்த மனிதருக்குக் காட்டுகிறதா! நீ சொன்ன உண்மைக்காக அந்தப் பழத்தை இனி வீட்டுக்குக் கொண்டு போ, அல்லது எங்கேயாவது எறிந்துவிடு. அந்த முட்டுக்காயை வாங்கிக் கொண்டு போகின்றாரே, அவர் அதைப் பற்றி என்ன அறிந்துவிட்டார்? நல்ல பழக்காய்கள் விற்ற விலைக்கே அதையும் விற்றேன். நீயும் அந்த முலாம் பழத்தை அவருக்கு விற்றிருந்தால் ஒன்றும் பாராமல் அதனை வாங்கிக் கொண்டு போயிருப்பார்'' என்றான்.

‘‘கிருஷ்ணா, எனக்கு இன்று காலையில் கிடைத்த காசைப் போல இரண்டு பங்கு காசுதான் வந்தாலும், நான் ஒரு பொய் சொல்லவும் மாட்டேன், பொய்யாய் நடக்கவும் மாட்டேன், அல்லாமல், இது கடைசியிலே எனக்குத்தான் நயம், எனக்கு ஒரு வாடிக்கையாளர் அகப்பட்டார்; உனக்கொருவர் போய் விட்டார்’’ என்று முருகன் கூறினான்.

மறுநாள் அந்தப் பெரியமனிதர் தனக்கு வேண்டிய பழங்களையும் காய்கறி-களையும் முருகனிடத்திலேயே வாங்கினார்; கிருஷ்ணனுடைய கடையில் ஒன்றும் வாங்கவில்லை. இந்த விதமாகவே அந்த வருடம் கழிந்தது. முருகனிடத்தில் எப்போதும் நல்ல பொருள் வாங்கலாம் என்று கண்டு கொண்ட அவர், அவனுடைய கடைக்கே எப்போதும் போவார்; சிலவேளை அவனிடத்தில் ‘‘அடுத்த வருடம் நீ என் செய்யப் போகிறாய்’’ என்று விசாரிப்பார்.

அடுத்த வருடம் அந்தப் பெரிய மனிதருடைய பண்டகசாலையில் ஒரு நம்பிக்கையான சிறுவன் தேவைப்பட்டான். அவர், முருகனைப் பார்க்கினும் வேறொருவன் அகப்படான் என்று நினைத்து, முருகனுக்கே அந்த வேலையைக் கொடுத்தார். அவன் தன் எசமானுக்குத் தன்னிடத்தில் மேலும் மேலும் நல்ல எண்ணம் வரும்படி நடந்து, உத்தியோகத்தில் உயர்வு பெற்று கடைசியில் எசமானோடு வர்த்தகத்தில் ஒரு பங்காளி ஆயினான்.

‘உண்மை பேசி உத்தமராக வாழ்வோம்’

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. 'உண்மை' என்பதற்கு வேறு பெயர் தருக.
2. தரப்பட்ட கதையில், முருகனிடம் காணப்பட்ட இரண்டு நல்ல பண்புகளைத் தருக.
3. உண்மை பேசியதால் முருகனுக்குக் கிடைத்த நன்மைகள் இரண்டினை எழுதுக.
4. பொய் பேசியதால் கிருஷ்ணனுக்கு ஏற்பட்ட நட்டம் யாது?

02. கீழே கொடுக்கப்பட்ட சொற்களைக் கொண்டு, வெற்றிடங்களை நிரப்புக.

நல்ல, நம்பிக்கையான, உண்மை, பொய்

1. சமய விழுமியப் பண்புகளில் .................................. பேசுதலும் ஒன்றாகும்.
2. '.................................. சொல்வதைப் பார்க்கிலும் இது நல்லது ஐயா' என்று முருகன் சொன்னான்.
3. முருகனிடம் .................................. பொருள் வாங்கலாம் என்று பெரிய மனிதர் கண்டு கொண்டார்.
4. பெரிய மனிதருக்கு .................................. சிறுவன் தேவைப்பட்டான்.

## செயற்பாடு

1. உண்மை பேசி நன்மையை அடைந்த அரிச்சந்திரன் கதையைத் தேடி அறிக. அதன் சுருக்கத்தை வகுப்பறையில் 3 நிமிடம் உரை நிகழ்த்துக.
2. உண்மையை வலியுறுத்தும் திருக்குறள்களை வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- ஆறுமுகநாவலர் எழுதிய இரண்டாம் பாலபாடத்தில் மெய்ம்மை என்னும் கதை உண்டு.
- உண்மை பேசியவருக்கு இலாபமும், பொய் பேசியவருக்கு நட்டமும் கிடைத்ததைக் கதை மூலமாக, உணர முடிந்தது.
- உண்மையே இறுதியில் வெற்றி பெறும்.
- நாமும் உண்மையைப் பேசி, நன்மையைப் பெற வேண்டும்.

## (ஆ) அன்பு செலுத்துதல்

அன்பு, நேயம் என்பன ஒரு பொருட் சொற்களாகும், நாவலர் பெருமான், அன்பு என்பதற்கு, ''ஒருவருக்குத் தம்மோடு தொடர்புடையவராய், தமக்கு இனியவராய் உள்ளவரிடத்தே நிகழும் உள்ளத்தின் நெகிழ்வு அன்பு'' என்று விளக்கம் தந்துள்ளார்.

நாம் அன்பு செலுத்த வேண்டியவர்களில் இறைவன் முதன்மையானவர். அவரை இடையறாது சிந்திக்க வேண்டும். அவரால் படைக்கப்பட்ட சகல உயிர்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டும். சிபிச்சக்கரவர்த்தி என்ற அரசன் பருந்திடம் இருந்து, புறாவைக் காப்பதற்காகத் தன் உடலின் தசையை அறுத்து ஈந்தான். மனுநீதிகண்ட சோழன் பசுவுக்காக இரங்கினான். திருவள்ளுவர் அத்தகைய அன்பின் பெருமையைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

''அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.''

அன்பில்லாதவர் பிறருக்கு உதவி செய்யமாட்டார்கள். ஆதலால், அவர்களது எல்லாப் பொருள்களும் அவர்களுக்கே உரியதாகும். ஆனால், அன்பு உடையவர் தம்மிடம் உள்ள பொருள்களால் மட்டுமன்றித் தம் உடம்பாலும் பிறருக்கே உரியவர் ஆகிறார்.

நாம் வீட்டிலுள்ள பெற்றோர், பெரியோர், சகோதரர் முதலானோர்களிடம் அன்பு செலுத்த வேண்டும். அத்தகைய அன்பு, கருணை உள்ள மாணவர்களே வீட்டிற்கும், பாடசாலைக்கும் சமுதாயத்துக்கும் அதிக மகிழ்ச்சியைத் தருகின்றனர்.

உங்களை நேசிப்பவர்களை நீங்கள் நேசிப்பது கஷ்டமானது அல்ல. அது இயற்கையானது. ஆனால், உங்களுக்குத் தீங்கு செய்பவர்களை நீங்கள் நேசிப்பது கடினமானது. அதனைப் பின்வரும் கதை விளக்குகின்றது.

மோகன் என்ற சிறுவன் ஒரு முதலாளியிடம் வேலை செய்தான், அச்சிறுவன் மிகவும் விசுவாசம் உடையவன். அதனால், முதலாளி அச்சிறுவனுக்குப் பதவி உயர்வு வழங்கினார். ஒரு நாள் இருவரும் சந்தைக்குச் செல்லும்போது, கூன் விழுந்த ஒரு கிழவரைக் கண்டனர். அக்கிழவர் படும் துன்பத்தைக் கண்ட மோகன் தன் முதலாளியிடம், ''அக்கிழவரை வீட்டிற்கு அழைத்துச் செல்வோமா?'' என்று கேட்டான்.

அந்த முதலாளி மிகவும் நல்லவர். அவர் மோகனைச் சந்தோசப்படுத்த எண்ணினார். முதலாளி, அந்தக் கிழவரை வீட்டிற்கு அழைத்து வந்தார். வீடு சென்றதும், ''அவரை வைத்து என்ன செய்வது?'' என்று மோகனைக் கேட்டார். ''அவர் என்னுடன் இருக்கட்டும் அவரால் செய்யக்கூடிய வேலைகளைக் கண்டிப்பாகச் செய்ய வைக்கிறேன்'' என்று மோகன் பதில் அளித்தான்.

மோகன் அக்கிழவரிடம் மிகவும் அன்பாக இருந்தான், அதை மற்றவர்கள் கவனித்தர்கள். முதலாளியும் கவனித்தார். ஒருவேளை அவர் மோகனுக்கு உறவி-னராக இருப்பாரோ என்று முதலாளி நினைத்தார். ஒருநாள் கிழவர் நோய்வாய்ப்பட்டார். அப்பொழுது, மோகன்தான் அவருக்கு அருகிலிருந்து உதவி செய்து கொண்டிருந்தான்.

முதலாளி மோகனைக் கூப்பிட்டு, ''ஏன் இந்தக் கிழவருக்காக இப்படிக் கஷ்டப் படுகின்றாய்? அவர் உனக்கு உறவுக்காரரா?'' என்று வினவினார். ''இல்லை ஐயா, அவர் எனது பழைய பகைவர். அவர் என்னைச் சிறுபிராயத்திலே ஏமாற்றி, கிராமத்திலிருந்து அழைத்து வந்து நகரத்தில் விற்றுவிட்டார். அன்று அவரைப் பார்த்ததும் யார் என்று தெரிந்து கொண்டேன். அவர் எனக்குத் தீங்கிழைத்தாலும் அவர் துன்பப்படும் நேரத்தில் உதவி செய்ய விரும்பினேன். அத்துடன்.

''இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்
நாண நன்னயம் செய்துவிடல்''

என்னும் திருவள்ளுவர் வாக்கிற்கமைய, ஒருவர் எங்களுக்குத் தீங்கு செய்தாலும் அவருக்கு உதவ வேண்டும். மேலும், இறைவனால் படைக்கப்பட்டவரே அக்கிழ-வரும். அவர் மீது அன்பு செலுத்துவது இறைவன் மீது அன்பு செலுத்துவதற்குச் சமமாகும். இதனையே சைவ சமயமும் போதிக்கின்றது'' என்று மோகன் கூறினான்.

முதலாளி தன்னிடம் வேலை செய்பவரிடம் இருந்து நல்லதொரு பாடத்தைக் கற்றுக் கொண்டார். கல்லூரிப் படிப்பு படித்தவர்களைவிட அன்பு வழியை மோகன் நன்றாக அறிந்திருந்தது அவருக்கு ஆச்சரியத்தை அளித்தது.

நீங்கள் மோகனைப் போல் மற்றவர்களிடமும் ஏனைய உயிர்களிடமும் அன்பாக இருக்க விரும்புகின்றீர்கள் அல்லவா? அதனைச் சிறுவயதில் இருந்தே கற்றுக் கொள்வது நன்று.

'அன்பே சிவம்'

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. அன்பு என்பதற்கு வேறு பெயர் கூறுக.
2. பருந்திடமிருந்து புறாவைக் காத்த அரசன் யார்?
3. எத்தகைய பண்புள்ள மாணவர்கள் வீடு, பாடசாலை, சமுதாயம் என்பவற்றுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றனர்?
4. உங்கள் வீட்டில், நீங்கள் அன்பு செலுத்துகின்றவர்களின் பெயர்களை எழுதுக.

**02. தரப்பட்ட சொற்களை வைத்து, கீறிட்ட இடங்களை நிரப்புக.**

என்பும், மோகன், இறைவன், பசுவுக்காக

1. நாம் ...................................................... மீது அன்பு செலுத்த வேண்டும்.
2. அன்புடையார் ...................................................... உரியர் பிறர்க்கு.
3. மனுநீதிகண்ட சோழன் ...................................................... இரங்கினான்.
4. கிழவருக்கு ...................................................... உதவி செய்தான்.

## செயற்பாடு

1. சிபிச்சக்கரவர்த்தி, மனுநீதிகண்ட சோழன் ஆகியோரின் கதைகளை ஆசிரியரின் உதவியுடன் தேடி அறிக. அதனை வகுப்பில் சுவைபடக் கூறுக.
2. ‘‘உயிர்களிடத்தில் அன்பு காட்டுவோம்’’ என்ற தலைப்பில் வகுப்பறையில் 3 நிமிடம் உரை நிகழ்த்துக.

### பாடச்சுருக்கம்

- அன்பு என்பது நேயம் எனவும் அழைக்கப்படும்.
- நாம் ஆசிரியர், பெற்றோர், சகோதரர் மீதும், சக மாணவரிடமும் பிராணிகளிடமும் அன்பு செலுத்துவோம்.
- சிபிச்சக்கரவர்த்தி பருந்திடமிருந்து புறாவைக் காக்க, தன் உடலின் தசையை அறுத்து ஈந்தான். மனுநீதிகண்ட சோழன் பசுவுக்காக இரங்கினான்.
- நமக்குத் தீங்கு செய்பவர்களுக்கும் அன்பு காட்டவேண்டும். அதற்கு மோகன் எடுத்துக்காட்டாக உள்ளான்.

## (இ) பெரியோரைக் கனம்பண்ணுதல்

எமது சமயத்திலுள்ள விழுமியப் பண்புகளில் பெரியோரைக் கனம்பண்ணுதல் என்பது சிறந்த பண்பாகும். அவ்வாறான நற்பண்புகளை சிறுவர், சிறுமியர்களாகிய நீங்கள் இப்போதிருந்தே கடைப்பிடிக்க வேண்டும்.

பெற்றோர், குரு, வயதில் மூத்தோர் முதலானோர் 'பெரியோர்' என அழைக்கப்படுகின்றனர். உங்கள் வீட்டில் அப்பா, அம்மா, அக்கா, அண்ணன் ஆகியோர் அவர்களைவிட வயதில் மூத்தவர்களுக்கு மதிப்புக் கொடுத்து நடப்பதைக் கண்டிருப்பீர்கள். அதனை நீங்களும் பின்பற்றி நடக்க வேண்டும்.

உங்களிற் பலர் காலையிலும் மாலையிலும் இறைவனை வழிபட்ட பின்னர், உங்கள் பெற்றோர்களின் கால்களில் வீழ்ந்து வணங்குகின்றீர்கள். அது மட்டும் போதாது. அவர்களின் சொற்கேட்டு, கீழ்ப்பணிந்து நடக்க வேண்டும். நமது பெற்றோருக்கு நமக்கு நன்மை தரும் விடயங்கள் எவை என்பது தெரியும். அதனால், அவர்களது வார்த்தைகளைக் கேட்டு நடப்பது நல்ல பண்பாகும்.



சைவ சமயி ஒருவரின் கடமைகளில் பெரியோர்களைக் கனம்பண்ணுதல், பெற்றோரைப் பேணல் என்பன மிக முக்கியமானவையாகும். நீங்கள் பிறந்ததிலிருந்து, உங்களுடைய இளமைப் பருவம் வரை பெற்றோரே உங்களைப் பேணுகின்றனர். உங்களின் நலனுக்காக மிகுந்த கஷ்டப்படுகின்றனர். நீங்கள் உங்களுக்குத் தேவையான அனைத்திற்கும் பெற்றோர்களையே சார்ந்திருக்கின்றீர்கள்.

பெற்றோர் செய்யும் இத்தகைய உதவிகளைப் பெற்று, நீங்கள் பெரியவராகும் போது, அவர்கள் முதியவர்களாகி விடுகின்றனர். அப்பொழுது, அவர்களைப் பேணும் பொறுப்பு உங்களுக்கே உரியது. அதில் நீங்களும் பங்கெடுக்க வேண்டும். இப்போதிருந்தே உங்களால் செய்யக் கூடிய சிறு சிறு உதவிகளை அவர்களுக்குச் செய்யுங்கள். தினமும் வீட்டைச்

சுத்தம் செய்தல், உணவு உண்ட பாத்திரத்தைக் கழுவி வைத்தல் முதலானவை அவற்றுள் சிலவாகும். அதனால், உங்கள் பெற்றோர், பெரியோர் அனைவரும் மகிழ்ச்சி அடைவார்கள்.

நாம் கனம்பண்ண வேண்டிய பெரியோரில் குரு முதன்மையானவர். குரு என்பது ஆசிரியரைக் குறிப்பதாகும். ஆசிரியரிடம் மரியாதையுடனும் பயபக்தியுடனும் நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் வகுப்பறைக்குள் வரும்போது எழுந்து நின்று வணக்கம் செலுத்துதல், அவர்கள் கற்பிக்கும் விடயங்களை ஆர்வத்துடன் கற்றல், அவர் தரும் பணிகளை ஒழுங்காகச் செய்துவருதல முதலியவற்றினூடாக் அவர்களைக் கனம்பண்ணலாம். அவர்களை வேறு இடங்களில் காணும் போதும் வணக்கம் கூறி, மரியாதை செலுத்துதல் வேண்டும். ஆலயங்களிலுள்ள சமய குருமாருக்கும் மதிப்பளிக்க வேண்டும். அவர்கள விபூதிப் பிரசாதம் தரும்போது கும்பிட்டு இரு கைகளாலும வாங்க வேண்டும்.



உங்களுடைய வீட்டுக்குப் பெரியோர் வருவதைக் கண்டவுடன் இருக்கையை விட்டு எழ வேண்டும். முகமலர்ந்து இனிய சொற்களைக் கூறி, அடக்கத்துடன் அவர்களை வரவேற்று, பணிவிடை செய்ய வேண்டும். அவர்கள் வீட்டைவிட்டு வெளியே செல்லும்போது, அவர்களுடன் வாயில்வரை சென்று வழியனுப்ப வேண்டும். விழாக்கள், பண்டிகைகள் நடைபெறும்போது, பெரியவர்களைத் தேடிச் சென்று, அவர்களுடைய ஆசீர்வாதத்தைப் பெறுதல் வேண்டும். பேருந்து, புகைவண்டி போன்றவற்றில் பயணம் செய்யும் போது, பெரியவர்கள், வயதானவர்கள் வந்தால், எழுந்து அவர்களுக்கு ஆசனத்தைக் கொடுத்தல் வேண்டும்.

நாம், பெரியோர்களுக்கு முன்னால் செய்யத்தகாத செயல்கள் பல உள்ளன. உயர்ந்த ஆசனத்தில் இருத்தல், காலை நீட்டிக் கொண்டிருத்தல், கால் மேல் கால் போட்டுக் கொண்டிருத்தல், எதிர்த்துப் பேசுதல், கை சுட்டிப் பேசுதல் என்பன அவற்றுட் சிலவாகும். அவற்றைத் தவிர்த்து, பெரியோரைக் கனம்பண்ணுவோம் அவர்களின் ஆசீர்வாதத்தைப் பெற்று நலமாக வாழ்வோம்.

"மாதா பிதா குரு தெய்வம்"

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பெரியோர் எனக் குறிப்பிடப்படுபவர்கள் யாவர்?
2. நீங்கள் உங்கள் வீட்டிலுள்ள பெரியோர்களுக்கு எவ்வாறான உதவிகளைச் செய்கின்றீர்கள்?
3. 'குரு' என அழைக்கப்படுபவர் யாவர்?
4. பெரியோர் முன்னால், தவிர்க்க வேண்டிய செயல்கள் மூன்றினைக் குறிப்பிடுக.

02. **தரப்பட்டுள்ள சொற்களை வைத்து, வெற்றிடங்களை நிரப்புக.**

| எழுந்து நின்று, கனம்பண்ணுதல், ஆசீர்வாதம், மதிப்பு, சமய குரு |
|---|

1. சமய விழுமியப் பண்புகளில் பெரியோரைக் ................................ சிறந்த பண்பாகும்.
2. வீட்டிலுள்ள பெரியவர்களுக்கு ................................ அளிக்க வேண்டும்.
3. ஆசிரியர் வகுப்பறைக்குள் வரும்போது ................................ வணக்கம் செலுத்துதல் வேண்டும்.
4. நமது ஆலயங்களிலுள்ள ............................ மதிப்பளிக்க வேண்டியவராவர்.
5. பண்டிகை நாளில் பெரியோரை வணங்கி, அவர்களுடைய ................................ பெற வேண்டும்.

## செயற்பாடு

1. உங்கள் வீட்டிற்குப் பெரியவர் ஒருவர் வருகிறார். அப்பெரியவர் உங்கள் வீட்டில் இருந்து செல்லும் வரை, அப்பெரியவரை எவ்வாறு கனம்பண்ணுவீர்கள் என்பதை எழுதுக.
2. பாடசாலையில் அதிபர், ஆசிரியர் முதலானோரை எவ்வாறு கனம்பண்ணு கிறீர்கள் என்பதைச் சுருக்கமாக எழுதுக.

### பாடச்சுருக்கம்

- நாம் பெற்றோர், குரு (ஆசிரியர்), வயதில் மூத்தோர் ஆகியோரைக் கனம்பண்ணுதல் வேண்டும்.
- வீட்டிலும், பாடசாலையிலும், கோயிலிலும், பயணம் செய்யும்போதும் பெரி-யோரைக் கனம்பண்ணச் சந்தர்ப்பங்கள் உள்ளன.
- வீட்டிற்கு வரும் பெரியவர்களுக்குச் செய்யக்கூடிய பல நல்ல செயல்கள் உள்ளன.
- பெரியோர்களின் ஆசீர்வாதம் நமக்கு நன்மை தரும்.
- பெரியோர் முன் செய்யத்தகாத செயல்கள் பல உள்ளன. அவற்றை நாம் தவிர்த்தல் வேண்டும்.

## (ஈ) பகிர்ந்துண்ணல்

நமது சமூகத்தில் உள்ளவர்களிடம் வளர்க்கப்பட வேண்டிய சமய விழுமியப் பண்புகளில் பகிர்ந்துண்ணலும் ஒன்றாகும். அதனையே, எமது முன்னோர்கள் அறம், தர்மம் என்னும் பெயர்களால் வழங்கினர்.

ஔவையார், 'அறம் செய விரும்பு', 'ஐயமிட்டுண்' என ஆத்திசூடியில் அழகாகக் குறிப்பிட்டுள்ளார். திருமூலர், பசியென்று வந்த எவருக்கும் நாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி உணவைக் கொடுத்து, பகிர்ந்துண்ணுதல் எல்லோராலும் செய்யக்கூடிய அறம் என்கிறார். இதனைப் பின்வரும் திருமந்திரப் பாடலில்

'யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.' எனக் குறிப்பிட்டுள்ளார்.

திருவள்ளுவரும் மக்கள் செய்ய வேண்டிய அறங்களில் பகிர்ந்துண்ணலை

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.' எனக் குறிப்பிட்டுள்ளார்.

அறங்கள் எல்லாவற்றிலும் தலையான அறமாக விளங்குவது, தமக்குக் கிடைத்த உணவை மற்றவர்களுக்கும் பகிர்ந்து கொடுத்து, தானும் உண்டு பல உயிர்களையும் காப்பாற்றுவதாகும். மேலும்,

'செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.'

என்று திருவள்ளுவர் இல்வாழ்வானின் கடமையையும் குறிப்பிடுகின்றார். அதாவது, தன்னிடத்து வந்த விருந்தாளிக்கு உணவளித்து உபசரித்து, அதன்பின் வரக்கூடிய விருந்தாளியை உடனிருந்து உண்பதற்கு எதிர்பார்க்கும் இல்லறத்தான், மறுபிறப்பில் தேவனாகித் தேவர்களுக்குச் சிறந்த விருந்தினனாகப் போற்றப்படுவான் என்பதாகும்.



திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் திருவீழிமிழலையில் பஞ்சம் ஏற்பட்டபோது, இறைவனின் துணையோடு உணவு கொடுத்து பஞ்சத்தை நீக்கினார்கள். நாமும் தைப்பொங்கல், சித்திரைப் புத்தாண்டு என்பவற்றைக் கொண்டாடும் போது, நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அயலவர்களுக்கும் பொங்கல் மற்றும் உணவுப் பொருட்களைப் பகிர்ந்தளிக்கின்றோம் அல்லவா? அதனை நாம் முடிந்தவரையில் கடைப்பிடிக்க வேண்டும். வீட்டிலும் பாடசாலையிலும் இப்பண்புகளை வளர்த்தல் அவசியமாகும்.

## பயிற்சிகள்

**01. பொருத்தமான விடையைத் தெரிவு செய்து, அதன் கீழ்க் கோடிடுக.**

1. ‘அறம் செய விரும்பு’ என்பதை வலியுறுத்தும் நூல்.

   (அ) ஆத்திசூடி (ஆ) கொன்றைவேந்தன் (இ) மூதுரை

2. திருமந்திரம் என்னும் நூலின் ஆசிரியர்

   (அ) திருவள்ளுவர் (ஆ) ஔவையார் (இ) திருமூலர்

3. பகிர்ந்துண்ணலுடன் தொடர்புடைய பண்டிகை ஒன்று.

   (அ) சிவராத்திரி (ஆ) சித்திரை வருடப்பிறப்பு (இ) மாசிமகம்

4. எல்லோராலும் இலகுவாகச் செய்யக்கூடிய அறச்செயல்

   (அ) உண்ணும்போது ஒரு கைப்பிடி உணவை வழங்கல்

   (ஆ) பணம் வழங்கல் (இ) உடை வழங்கல்

## செயற்பாடு

1. நீங்கள் வகுப்பறையில் அல்லது வீட்டில் உணவைப் பகிர்ந்துண்ட சந்தர்ப்பம் ஒன்றினை வகுப்பறையில் விளக்கிக் கூறுக.

### பாடச்சுருக்கம்

- இன்றைய சமூகத்தில் வளர்க்கப்பட வேண்டிய பண்புகளில் பகிர்ந்துண்ணலும் ஒன்றாகும்.
- நமது முன்னோர் பகிர்ந்துண்ணலின் அவசியம் பற்றி நூல்களில் கூறியுள்ளனர்.
- சைவ ஆலயங்கள் தோறும் பகிர்ந்துண்ணல் பண்பு வளர்க்கப்படுகின்றது.

## (உ) தன்னம்பிக்கையை வளர்த்தல்

நாம் இறை நம்பிக்கை, சமய நம்பிக்கை பற்றி அறிந்திருக்கின்றோம். ஆனால் ஒவ்வொருவரும் தம்முள் கட்டியெழுப்ப வேண்டிய தன்னம்பிக்கை பற்றி அறிய வேண்டியது அவசியமாகும். தன்னம்பிக்கை என்றால் ஒருவருக்குத் தன் மீது ஏற்படும் நம்பிக்கையாகும்.

தன்னம்பிக்கையை வளர்க்கும் வழி உங்களிடமே உண்டு. அதற்கு முதலில் தேவை நம்பிக்கையாகும். என்னால் இதைச் செய்ய முடியும், அதற்கு இறைவன் துணை நிற்பான் என்று நம்புங்கள், அதனுடன், முயற்சியையும் சேர்த்துக் கொள்ளுங்கள். திட்டமிட்டு நேரத்தை ஒதுக்குங்கள், இப்போது பயிற்சியில் ஈடுபடுங்கள். உங்களுடைய பாட நூலுக்கமைவாகப் படியுங்கள். அதிலுள்ள செயற்பாடுகள், பயிற்சிகளைச் செய்யுங்கள், குறிப்பிட்ட பாடத்தைப் படிப்பதற்கு முன், உங்களுக்கு அது சிரமமாக இருந்தது. ஆனால், படித்துப் பயிற்சிகளைச் செய்தது யார்? நிச்சயம் நீங்களே. இப்போது உங்களுக்கு உங்கள் மீது ஒரு பற்று, உறுதி, நம்பிக்கை ஏற்பட்டிருக்கும். அதனை மேலும், மேலும் பயிற்சியில் கொண்டுவர வேண்டும். அப்போது உங்களின் வெற்றியைத் தடுக்க யாராலும் முடியாது.

தன்னம்பிக்கையும் முயற்சியும் என்றுமே தோல்வி அடைவதில்லை. ‘நம்பினோர்க்கு இயற்கை நலமே செய்யும்’, ‘முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார்’ ‘முயற்சி திருவினை யாக்கும்’ என்னும் முதுமொழிகள், முயற்சியின் சிறப்பை வலியுறுத்துகின்றன.

‘முடியாது’ என்பது உங்களின் வார்த்தையில் இருக்கவே கூடாது. முடியும்; அதனை என்னால் செய்ய முடியும் போன்ற வாக்கியங்களை உங்களது வேதவாக்காகக் கொள்ளுங்கள். உங்களால் உண்மை பேச முடியும். பெரியோர்களைக் கனம்பண்ண முடியும்; ஆசிரியருக்குக் கீழ்ப்படிவுள்ளவர்களாக, நற்பண்புள்ள மாணவர்களாகத் திகழ முடியும். மற்றவர்களுடன் உணவைப் பகிர்ந்துண்டு, ஒற்றுமையை வளர்க்க முடியும். இவ்வாறு சிந்தித்துக் கொண்டே போனால், உங்களால் முடியாதது ஒன்றுமே இல்லை என்ற நிலைக்கு வருவீர்கள். காந்தியின் தன்னம்பிக்கைதான் அவரை, ‘மகாத்மா’ ஆக்கியது. அரிச்சந்திரனின் தன்னம்பிக்கைதான் அவரை உண்மையின் மறுவடிவமாக்கியது.

எவராக நீங்கள் வர விரும்புகின்றீர்களோ, நிச்சயம் நீங்கள் அவராக வருவீர்கள். ஆனால், தன்னம்பிக்கையுடன் முயன்று, முன் சொன்ன பயிற்சி முதலானவற்றையும் சேர்த்தால் நிச்சயம் வெற்றி பெறுவீர்கள். இன்று உயர் நிலையில் இருப்பவர்களைப் பாருங்கள். அவர்கள் தன்னம்பிக்கையாலே உயர்ந்தவர்கள். அவர்கள், ‘‘நம்பிக்கை என்ற சொல்லின் முன்னால் கஷ்டங்கள் எல்லாம் சரிந்துவிடும்’’ என்ற கூற்றினை ஏற்று, முயற்சி செய்து வெற்றி கண்டவர்கள், அவர்களின் வழியைப் பின்பற்றி, தன்னம்பிக்கையுடன் வாழ்வில் வெற்றி பெறுவோம். வெற்றிக்கு எல்லை இல்லை.

### வெற்றி

எண்ணும் எண்ணங்கள் யாவினும் வெற்றி
எங்கும் வெற்றி எதனிலும் வெற்றி
கண்ணு மாருயி ருமென நின்றாள்
காளித் தாயிங் கெனக்கருள் செய்தாள்
மண்ணுங் காற்றும் புனலு மனலும்
வானும் வந்து வணங்கி நில்லாவோ?
விண்ணு ளோர்பணிந் தேவல்செய் யாரோ
வெல்க காளி பதங்களென் பார்க்கே ? (சுப்பிரமணிய பாரதியார்)

தன்னம்பிக்கை தொடர்பாக சுவாமி விவேகானந்தர்

'நான் என் மூதாதையரின் காரணமாகவே பெருமை கொள்கிறேன். பழமையைப் படிக்கப் படிக்க, இந்தப் பெருமை இன்னும் அதிகரிக்கிறது. அது எனக்கு வலிமையையும், வீர நம்பிக்கையையும் தருகிறது. இறைவன் அருளால், அதே பெருமிதம் உங்களுக்கும் உண்டாகட்டும். உங்களது முன்னோர்களிடம் இருந்த நம்பிக்கை உங்கள் உதிரத்தில் கலக்கட்டும். அது உங்கள் வாழ்க்கையோடு பிரிக்க முடியாத பகுதியாக விளங்கட்டும் அது உலகை உய்விக்கத் தொண்டு புரியும்படி உங்களைத் தூண்டட்டும்.' என குறிப்பிட்டுள்ளார்.

'நம்பினார் கெடுவதில்லை நான்கு மறைத்தீர்ப்பு'

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நீங்கள் உங்களது தன்னம்பிக்கையை எவ்வாறு வளர்த்துக் கொண்டீர்கள் என்பதை எழுதுக.
2. தன்னம்பிக்கையால் உலகை வென்ற மகான்களின் பெயர்களைக் குறிப்பிடுக.
3. நீங்கள் தன்னம்பிக்கையுடன் செயற்பட்டு, வெற்றியடைந்த சம்பவத்தைச் சுருக்கமாக எழுதுக.

## செயற்பாடு

1. தன்னம்பிக்கையைக் கட்டியெழுப்புதல் - என்னும் தலைப்பில் ஐந்து நிமிடம் உரை நிகழ்த்திக் காட்டுக.
2. தன்னம்பிக்கையால் உயர்ந்தோர் விபரங்களைச் சேகரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- ஒருவருக்கு தன்மீது ஏற்படும் நம்பிக்கை தன்னம்பிக்கை எனப்படும்
- தன்னம்பிக்கையால் உயர்ந்தவர்களில் சுவாமி விவேகானந்தர், அரிச்சந்திரன் முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள்.
- நாமும் தன்னம்பிக்கை உள்ளவர்களாக வாழப் பழகிக் கொள்ள வேண்டும்.

# 6 வாழ்வியல் சடங்குகள்

மனிதன் தனது வாழ்க்கையை அர்த்தத்துடனும் நெறிமுறை தவறாதும் வாழவேண்டும். அதற்காக எமது முன்னோர், மனித வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் சடங்குகளை ஒழுங்குபடுத்தியுள்ளனர். சடங்குகள் என்பவை, மனிதன் உலக வாழ்க்கைக்கான தேவைகளை அர்த்தத்துடன் அடைய முயற்சிக்கும் வழி முறையாகும்.

சைவ சமயத்தவர்களால் கொண்டாடப்படும் பல சடங்குகள் எமது வாழ்வியலோடு தொடர்புடையவை. அவ்வாறு மக்களின் வாழ்வுடன் தொடர்புபடும் சடங்குகளை வாழ்வியல் சடங்குகள் என்பர். பிறந்த குழந்தைக்குப் பெயர் சூட்டுதல், சோறூட்டுதல், ஏடு தொடக்கல் முதலானவை வாழ்வியல் சடங்குகளுட் சிலவாகும். நாம் அவை பற்றி அறிந்திருத்தல் அவசியமானதாகும்.

## அ. பெயர் சூட்டுதல்

பெயர் சூட்டும் சடங்கு **நாமகரணம்** எனவும் வழங்கப்படும். குழந்தை பிறந்ததிலிருந்து ஒரு மாத காலத்தினுள் பெயர் சூட்டுதல் வேண்டும். முன்பு தெய்வங்களின் பெயர்களைச் சூட்டும் வழக்கமே பெரும்பாலும் இருந்தது. ஆனால் தற்போது அந்த வழக்கம் அருகி வருகின்றது. எனவே, அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். அது எமது பண்பாடு வளர வழிவகுக்கின்றது.

குழந்தை பிறந்த நட்சத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு, முதல் எழுத்தைத் தெரிவு செய்து பெயரிடும் வழக்கம் சைவ சமயத்தவர்களிடையே உண்டு. பெயரிடுதல் தொடர்பான விளக்கத்தைப் பஞ்சாங்கத்தில் காணலாம். குழந்தைகளுக்குப் பெயர்களைத் தேர்ந்தெடுப்பதில் பெற்றோர் மிகுந்த கவனத்தைச் செலுத்துதல் வேண்டும். நமது கலாசாரத்தை வலியுறுத்துகின்ற பெயர்களைக் குழந்தைகளுக்குச் சூட்டுதல் நல்லது.

பெயர் சூட்டல் சடங்கானது, ஒரு நல்ல நாளில் பெரியோர்கள் முன்னிலையில் இடம் பெறும். முதலில் இறைவனுக்கு வழிபாடு நடத்தப்படும். அதனை அடுத்து, தெரிந்தெடுத்த பெயரை, குழந்தையின் தந்தை அல்லது மாமன் குழந்தையின் காதில் மூன்று முறை சொல்ல வேண்டும். சூழ்ந்திருக்கும் பெரியோர்களும் அதனை ஏற்றுச் சொல்ல வேண்டும்.

எமது சமயத்தில் குழந்தைக்குப் பெயர் சூட்டி ஆசீர்வதித்தல் ஒரு சடங்காகும். நாமும் அவற்றிற்கு மதிப்பளித்து ஒழுகுதல் வேண்டும்.

## ஆ. சோறூட்டுதல்

குழந்தை பிறந்த ஆறாவது மாதத்திலும் சோறூட்டும் சடங்கு நடைபெறும். அச் சடங்கு **அன்னப்பிராசனம்** எனவும் வழங்கப்படும். குழந்தை பிறந்ததில் இருந்து திரவ ஆகாரத்தையே பருகிவரும் அத்தகைய குழந்தைக்கு சோறு (அன்னம்), தயிர், நெய், தேன் என்பவற்றைக் கலந்து, நல்லெண்ணத்துடன் முதன் முதலாக ஊட்டி விடுதல் **சோறூட்டல்** எனப்படும். இதற்குரிய பொருத்தமான நாளினைப் பஞ்சாங்கத்தில் பார்த்துத் தெரிவு செய்தல் வேண்டும்.

சோறூட்டல் சடங்கு ஆலயம், வீடு முதலான இடங்களில் நடைபெறும். அச் சடங்கு நடைபெறும்போது தாயார் குழந்தையை மடியில் வைத்துக்கொள்ள வேண்டும். தந்தையார் அருகில் இருக்க வேண்டும். சோறூட்டல் சடங்கு விநாயகர் பூசையுடன் ஆரம்பிக்கப்படும். ஒரு கிண்ணத்தில் சோறு, தயிர், நெய், தேன் என்பவற்றைப் பிசைந்து, பூசையில் வைக்கப்படும். பூசை நிறைவடைந்ததும், பூசையில் வைத்த பிரசாதத்தை தந்தை அல்லது மாமன் குழந்தைக்கு, சிவசிந்தனையுடனும் நல்லெண்ணத்துடனும் மூன்று முறை ஊட்டி விடுதல் வேண்டும். தொடர்ந்து மற்றவர்களும் ஊட்டிவிடுவர்.



குழந்தை உடல் வலிமையோடு இருக்கவும் வாழ்நாளில் உணவுக்கு எந்தக் குறையுமின்றி உண்டு வாழவும் இறையருளை வேண்டிப் பிரார்த்தித்தல் சோறூட்டல் சடங்கின் முக்கிய நோக்கமாகும்.

## இ. ஏடு தொடக்கல்

ஏடு தொடக்கல் நிகழ்வு 'வித்தியாரம்பம்', அட்சர அப்பியாச ஆரம்பம்' என்ற பெயர்களாலும் அழைக்கப்படும். குழந்தைக்கு மூன்று வயதானதும் விஜயதசமி அன்று அல்லது பஞ்சாங்கம் குறிப்பிடும் வேறு நல்ல நாளில் முதன் முதலில் கல்வி புகட்டுதல் ஏடு தொடக்கல் எனப்படும்.

ஆலயம், வீடு, பாடசாலை ஆகிய இடங்களில் ஏடு தொடக்கல் நிகழ்வு இடம் பெறும். ஆலயத்தில் பூசை நிகழ்த்தும் சமய குரு, குழந்தையின் தந்தை, ஆசிரியர், நல்ல கல்வி அறிவுள்ள பெரியோர்கள் ஆகியோர்களில் ஒருவர் ஏடு தொடக்கி வைத்தல் சிறப்பானதாகும். ஏடு தொடக்கும் போது, குழந்தையை முதலில் விநாயகரையும் சரஸ்வதி தேவியையும் வணங்கச் செய்ய வேண்டும். அதன் பின்னா, ஏடு தொடக்கி வைப்பவரும் வணங்குவார். ஏடு தொடக்கி வைப்பவர் வேட்டி அணிந்து, விபூதி முதலான சிவசின்னங்களைத் தரித்து, குழந்தையைத் தனது மடியில் இருக்கச் செய்து, முன்னால் உள்ள தட்டத்தில் வைக்கப்பட்ட அரிசியில் குழந்தையின் விரலைப் பிடித்து, 'அ' முதல் '∴' வரையுள்ள எழுத்துக்களை எழுதுவதும், அதனைச் சொல்விப்பதும் எமது சமய மரபாகும்.



சைவ மக்களின் வாழ்வியல் சடங்குகளில் வாழ்வியல் வேறு, சமயம் வேறு என்ற கருத்துக்கே இடமில்லை. வாழ்வியலோடு இணைந்ததுதான் சமயம். அத்தகைய பண்பினை எமது வாழ்வியல் சடங்குகள் கொண்டுள்ளன.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. வாழ்வியல் சடங்கு என்றால் என்ன?
2. வாழ்வியல் சடங்குகள் மூன்றின் பெயர்களைத் தருக ?
3. சோறூட்டல் சடங்கின் முக்கிய நோக்கம் யாது?
4. ஏடு தொடக்க உகந்தவர்கள் யாவர்?

## செயற்பாடு

1. பெயர் சூட்டுதல், சோறூட்டுதல், ஏடு தொடக்குதல் ஆகிய நிகழ்வுகள் நடைபெறும் போது, அவற்றைச் சென்று பார்வையிடுக. அவை பற்றிய தகவல்களைச் சேகரித்து, வகுப்பறையில் சமர்ப்பிக்க.
2. ஆசிரியரின் உதவியுடன் பெயரிடுதல் தொடர்பான விளக்கத்தைப் பஞ்சாங்கத்தில் பார்த்து, அதனை அட்டவணைப் படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- மக்களின் வாழ்க்கையோடு தொடர்புபட்ட சடங்குகள் வாழ்வியல் சடங்குகள் எனப்படும். பெயர் சூட்டுதல், சோறூட்டுதல், ஏடு தொடக்கல் என்பன அவற்றுட் சிலவாகும்.
- வாழ்வியல் சடங்குகள் நடைபெறும் போது, இறைவழிபாடு முதன்மை பெறுகின்றது.
- வாழ்வியல் சடங்குகள் ஒவ்வொன்றுக்கும் உரிய நோக்கங்கள் உள்ளன.
- வாழ்வியல் சடங்குகள் ஒவ்வொன்றும் அதற்கே உரிய முறையில் கொண்டாடப்படுகின்றன.
- நாம் வாழ்வியல் சடங்குகளுக்கு மதிப்பளித்து, ஒழுகுதல் வேண்டும். அவை நம் வாழ்க்கையை மேம்படுத்தும்.

# 7 விரதங்களும் பண்டிகைகளும்

சைவ மக்களால் பின்பற்றப்படுகின்ற சமய ஒழுகலாறுகளில் விரதங்கள், பண்டிகைகள் என்பனவும் அடங்கும். அவை எமது வாழ்வில் இறையுணர்வையும் புனிதத் தன்மையையும் ஏற்படுத்த உதவுகின்றன. நாம் அனுட்டிக்கும் விரதங்கள், கொண்டாடும் பண்டிகைகள் என்பன பற்றிய விளக்கம், நாம் சைவ பாரம்பரியங்களைப் பேணி, வாழ்வில் கடைப்பிடிப்பதற்கு உதவியாக அமையும் அவ்வகையில் விரதங்கள், பண்டிகைகள் பற்றி நாம் கற்போம்.

## (அ) விரதங்கள்

'விரதமாவது மனம் பொறிவழிப் போகாது நிற்றற் பொருட்டு, உணவை விடுத்தேனும் சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை மெய்யன்போடு விசேடமாக வழிபடல்' என நாவலர் பெருமான் குறிப்பிடுகின்றார். விரதம் என்பது ஒரு வகை விசேட வழிபாடாகும். விரதம், நோன்பு என்பன ஒரே கருத்தைத் தரும் சொற்களாகும்.'

விரதங்களை வெள்ளிக்கிழமை விரதம், செவ்வாய்க்கிழமை விரதம் எனவும் சிவவிரதம், சக்தி விரதம், விநாயகர் விரதம், முருக விரதம், வைரவ விரதம், விஷ்ணு விரதம் எனவும் பாகுபடுத்துவர். பொதுவாக, விரதங்களை அனுட்டிக்கும்போது பின்பற்ற வேண்டிய செயல்கள் பல உள்ளன. அதிகாலையில் நித்திரை விட்டெழுதல், புறத்தூய்மை அகத்தூய்மை பேணுதல், தோய்த்து உலர்ந்த ஆடை அணிதல், ஆலயத்திற்குச் சென்று பக்தியுடன் வழிபடுதல், அர்ச்சனை செய்வித்தல், திருமுறை பாடுதல், உணவைச் சுருக்குதல், பகிர்ந்துண்ணல் என்பவற்றை விரத காலங்களில் செய்தல் உத்தமமாகும். விரத நாட்களில் முடிந்தவரை தான தருமங்கள் செய்தல், உணவளித்தல் போன்றவற்றை மேற்கொள்ள வேண்டும்.

விரதங்களை அனுட்டிப்பதனால் பல நன்மைகள் கிடைக்கின்றன. விரதங்கள், நமக்கு நல்லறிவைத் தருகின்றன. அவற்றை அனுட்டிப்பதால் கடவுள் மீது பக்தியை ஏற்படுத்துகின்றன. எம்மை பொறுமை, புலக்கட்டுப்பாடு உள்ளவர்களாகவும், மன வலிமை உடையவர்களாகவும், ஒழுக்கசீலர்களாகவும் அது மாற்றுகின்றது. அவ்வகையில் விரதங்கள் மனிதரை நல்வழிப்படுத்துவதில் முக்கிய பங்கெடுக்கின்றன. எனவே, நீங்களும் விரதம் அனுட்டித்து, இறையருளையும் நற்பயன்களையும் பெற்றுக் கொள்ளுங்கள்.

## (ஆ) பண்டிகைகள்

சமயம் சார்ந்தும் வாழ்வியல் சார்ந்தும் வருடந்தோறும் குறிப்பிட்ட நாளில் விருந்துடன் கொண்டாடப்படும் விசேட தினங்கள் பண்டிகைகள் எனப்படும். பண்டிகை என்ற சொல் பெருநாள், விசேடநாள் என்னும் பொருளைத் தரும். பண்டிகையானது இறை உணர்வை வளர்க்கவும் குடும்பத்தாருடன் சந்தோஷமாக இருக்கவும் ஒற்றுமை, மகிழ்ச்சி என்பவற்றை ஏற்படுத்தவும் காரணமாக உள்ளது.

வழக்கமான உணவிலும் பார்க்க. சிறப்பான சுவையான உணவு வகைகளைச் சிறுவர்கள், பெரியர்கள், அயலவர்கள், நண்பர்கள் முதலானோர் சேர்ந்து உண்ணும் விருந்து வைபவமாக பண்டிகைகள் விளங்குகின்றன. புத்தாடை அணிதல், கலை நிகழ்ச்சிகள் நடத்துதல், வாழ்த்து மடல்கள் அனுப்புதல் முதலான குதூகலச் செயற்பாடுகளும் பண்டிகைகளின்போது இடம்பெறுகின்றன.







பண்டிகைகளில் தைப் பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, தீபாவளி என்பன குறிப்பிடத்தக்கன, இவற்றுள், சித்திரை வருடப்பிறப்பு சித்திரை மாதப் பிறப்பன்று கொண்டாடப்படுகின்றது. அன்று அதிகாலையில் எழுந்து, பஞ்சாங்கம் குறிப்பிடும் புண்ணிய காலத்தில் மருத்து நீர் தேய்த்து நீராடுவர், பின்னர், புத்தாடை அணிவர், சூரியனுக்குப் பொங்கல் செய்து வழிபடுவர். அவற்றைத் தவிர, ஆலயங்களுக்குச் சென்று வழிபடுதல், பெரியவர்களைப் பணிந்து வணங்குதல். அவர்களிடம் கைவிசேடம் பெறுதல் போன்ற கருமங்களும், உணவு வகைகளைப் பகிர்ந்துண்ணல் என்பனவும் சித்திரை வருடப் பிறப்பன்று இடம்பெறும் நிகழ்வுகளாகும்.

சித்திரை வருடப் பிறப்பன்று சில கிராமங்களில் பாரம்பரியக்கலை நிகழ்வுகளும் நடைபெறுவதுண்டு. நல்ல சுபவேளையில் நாட்காரியங்கள் செய்து, தொழிலை ஆரம்பிப்பதும், உறவினர் வீடுகளுக்கு விருந்துக்குச் செல்வதும் இடம்பெறும்

சித்திரை மாதத்தில் கொண்டாடப்படும் நிகழ்வுகளில் சித்திரைப் (சித்திரா) பௌர்ணமியும் ஒன்றாகும். இது தமிழர்களுக்குரிய வரலாற்றுச் சிறப்பு மிக்க நாளாகும். பண்டைக்காலத்தில், தமிழகத்தில், பூம்புகாரில், இதே நாளில் இந்திர விழா நடைபெற்றது. இதனை, வசந்த விழா எனவும் அழைப்பர். இலங்கையிலுள்ள சைவ மக்கள் இதே நாளில் சித்திரகுப்த விரதத்தை அனுட்டித்து. சித்திரபுத்திரனார் கதை படித்து, கஞ்சி சமைத்து வழங்குவர். அது சித்திரைக் கஞ்சி எனப்படும். மேலும், சிவபதமடைந்த தாயின் பொருட்டு, பிள்ளைகள் சித்திரைப் பௌர்ணமி நாளில் விரதம் அனுட்டிப்பர்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. விரதம் என்றால் என்ன?
2. உங்களுக்குத் தெரிந்த மூன்று விரதங்களின் பெயர்களைத் தருக ?
3. பண்டிகை என்றால் என்ன?
4. சித்திரை வருடப்பிறப்பு கொண்டாடும்போது, செய்யப்படும் செயல்களை ஒழுங்கு முறையில் தருக.

**02. பின்வரும் விடயங்கள் சரியாயின் " ✔ " எனவும் பிழையாயின் " X " எனவும் அடைப்புக் குறிக்குள் அடையாளமிடுக.**

1. விரதங்களில் வெள்ளிக்கிழமை விரதமும் ஒன்றாகும். ( )
2. உணவை விடுத்து, இறைவனை வழிபடுவது பண்டிகையாகும். ( )
3. பண்டிகை நிகழ்வின் போது புத்தாடை அணிவர். ( )
4. தைப்பொங்களின் போது மருத்து நீர் வைத்து நீராடுவர். ( )

## செயற்பாடு

1. பத்திரிகைகளில் வெளிவரும் பண்டிகைகள், விரதங்கள் பற்றிய தகவல்களைச் சேகரித்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. ஒவ்வொரு தெய்வத்துக்கும் உரிய விரதங்களை ஆசிரியரின் உதவியுடன் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- விரதம், பண்டிகை என்பன எமது சமய ஒழுகலாறுகள் ஆகும்.
- விரதங்களை அனுட்டிக்கும் போது உரிய விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்.
- விரதங்கள், பண்டிகைகள் என்பன பல நன்மைகளை எமக்குத் தருகின்றன.

# 8 திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

இறைவன் மீது அளவற்ற பக்தி கொண்டு, தாம் செய்யும் தொழில்கள் யாவற்றையும் இறையர்ப்பணமாக்கி, அதனால் அருள்பெற்ற அருளாளர் பலர் உள்ளனர். அவர்களைப் பற்றிப் பெரியபுராணம் குறிப்பிடுகின்றது. அவ்வாறான செயல் புரிந்து அருள் பெற்ற ஒருவரே திருக்குறிப்புத் தொண்ட நாயனார் ஆவார்.

திருக்குறிப்புத் தொண்டர், தமிழகத்திலுள்ள காஞ்சி மாநகரத்தில் பிறந்தவர், அவர் ஒரு சலவைத் தொழிலாளி ஆவர். அவர் சிவபெருமானிடம் மிகுந்த பக்தி கொண்டவர். சிவனடியார்களது குறிப்பறிந்து, அவர்களது உடைகளை ஊதியமின்றித் தோய்த்துக் கொடுக்கும் தொண்டினைச் செய்தவர். அதனால், அவர் ''திருக்குறிப்புத் தொண்டர்'' என அழைக்கப்பட்டார். சிவபெருமான் அவரது தொண்டின் மகிமையை உலகுக்கு எடுத்துக்காட்ட விரும்பினார்.

ஒரு மழைக்கால வேளையில் சிவபெருமான் திருநீறு பூசி, அழுக்கான கிழிந்த ஆடையுடனும், மெலிந்த தோற்றமும் கொண்ட வேடத்துடனும் திருக்குறிப்புத் தொண்டரின் வீட்டுக்கு வந்தார். அவரைக் கண்டதும், திருத்தொண்டர் வீழ்ந்து வணங்கினார். வேண்டிய உபசாரங்களைச் செய்தார். பின்னர், அவரது அழுக்கான உடையைத் தந்தால், தான் சலவை செய்து தருவதாக, திருக்குறிப்புத் தொண்டர் கேட்டார். அதற்கு, சிவனடியார் வேடந்தரித்த சிவன், ''பொழுது மறைவதன் முன் சலவை செய்து தரமுடியுமென்றால் எடுத்துச் செல்லலாம்'' என்றார். திருக்குறிப்புத் தொண்டர் மகிழ்ச்சியுடன் சிவனடியாரது உடையை எடுத்துச் சென்றார்.

அவர் சலவை செய்து கொண்டிருக்கும்போது, சிவன் அருளால் மழை பொழியத் தொடங்கியது. அவரால் அந்த ஆடையை உலர வைக்க முடியவில்லை. தான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற முடியவில்லையே என்று கவலை அடைந்தார். அடியவரைக் குளிரில் தவிர்க்கச் செய்தமைக்காக மனம் வருந்தினார்; அதனால், தன் தலையைக் கல்லில் மோதச் சென்றார். அப்போது கல்லிலிருந்து திருக்கரம் ஒன்று தோன்றி நாயனாரைப் பற்றியது. சிவன் உமாதேவியாரோடு அவருக்குக் காட்சியளித்தார். திருக்குறிப்புத் தொண்டர் தம்மை மறந்து வீழ்ந்து வணங்கினார். சிவபெருமான் 'உமது உயர்ந்த பக்தியை உலகறியச் செய்தோம்; இனி எமது உலகை வந்தடைக' என அருளி மறைந்தருளினார்.

திருக்குறிப்புத் தொண்டர், தாம் செய்த தொழிலை, இறை சிந்தனையுடன் செய்தமையால், அவர் இறையருள் பெற்றார். அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவரானார். நாமும் செய்யும் தொழிலை இறையர்ப்பணத்துடன் செய்து நன்மை பெறுவோம்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ''திருக்குறிப்புத் தொண்டர்'' என நாயனார் அழைக்கப்படக் காரணம் யாது?
2. திருக்குறிப்புத் தொண்டரிடம் காணப்பட்ட சிறப்பியல்புகள் இரண்டு தருக.
3. திருக்குறிப்புத் தொண்டர் தனது தலையைக் கல்லில் மோதச் சென்றமைக்கான காரணம் யாது?

**02. பின்வரும் விடயங்கள் சரியாயின் '' ✔ '' எனவும் பிழையாயின் '' X '' எனவும் அடைப்புக்குள் அடையாளமிடுக.**

1. செய்யும் தொழிலை இறையர்ப்பணமாக்கினால் இறையருளைப் பெறலாம் ( )
2. அடியார் பெருமையைக் கூறும் நூல் திருக்குறளாகும். ( )
3. திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒரவராவார் ( )

## செயற்பாடு

1. திருக்குறிப்புத் தொண்ட நாயனார் கதை மூலம் நீங்கள் பெற்ற படிப்பினை-களை எழுதி, வகுப்பறையில் வாசித்துக் காட்டுக.
2. செய்யும் தொழிலைத் தெய்வமாகக் கொண்ட வேறு மூன்று நாயன்மார் களின் பெயர்களையும் அவர்கள் செய்த தொண்டுகளையும் எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- தாம் செய்த தொழிலை இறையர்ப்பணமாக்கி, இறை அருள் பெற்றவர் திருக்குறிப்புத்தொண்ட நாயனார்.
- அவர் இறைவன் மீதும், இறையடியார் மீதும் பக்தி கொண்டவர். வாக்குறுதி தவறாதவர்.
- திருக்குறிப்புத் தொண்டர் என்பது அவருடைய காரணப் பெயராகும்.
- நாயனாரின் இறைபக்தி, தொண்டு காரணமாக இறைவனே அவரைத் தேடி வந்து ஆட்கொண்டார்.
- நாம் எந்தத் தொழிலைச் செய்தாலும், அதை இறை அர்ப்பணமாகச் செய்ய வேண்டும்

# 9 கண்ணப்ப நாயனார்

எமது செயல்கள் எவ்வாறானவை என்பதல்ல முக்கியம்; நாம் அவற்றைச் செய்யும்போது கடமையுணர்வுடனும், அர்ப்பணிப்புடனும், பற்றுடனும் செய்ய வேண்டும். என்பதே முக்கியமானது. அவ்வாறான ஒரு செயலைச் செய்து இறையருள் பெற்றவரே கண்ணப்ப நாயனார் ஆவார். அவரின் பக்திச் சிறப்பை இங்கு படிப்போம்.

பொத்தப்பி நாட்டிலுள்ள உடுப்பூரில் நாகன் என்னும் வேடுவத் தலைவன் வாழ்ந்து வந்தான். அவனுக்குத், திண்ணனார் என்னும் பெயருடைய மகன் இருந்தான், நாகன் முதுமை காரணமாக, அரசுரிமையைத் தன் மகன் திண்ணனாருக்கு வழங்கினான். அரசுரிமையைப் பெற்ற திண்ணனார், குல மரபுப்படி கன்னிவேட்டைக்கு, தன் நண்பர்களான நாணன், காடன் என்போர்களுடன் காட்டுக்குச் சென்றார்.

திண்ணனார், வேட்டையின்போது பன்றி ஒன்றைக் கண்டார், அதைக் கொல்ல முற்பட்டபோது, அப்பன்றி காளத்தி மலைப் பக்கமாக ஓடியது, அதனை துரத்திச் சென்ற திண்ணனார். அம்பெய்து கொன்றார். கூடச் சென்ற நாணன், காடன் ஆகிய இருவரும் திண்ணனாரின் வீரத்தைக் கண்டு வியந்தனர். களைப்புற்ற மூவரும் பன்றியையும் எடுத்துக் கொண்டு நீர்தேடி, பொன்முகலி ஆற்றுப்பக்கம் சென்றனர். சிறிது தூரம் சென்றதும், எதிரே திருக்காளத்தி மலையைக் கண்டனர். ‘‘அந்த மலைக்குச் செல்வோம்’’ என்று திண்ணனார் நாணனிடம் கூறினார். அதைக் கேட்ட நாணன். ‘‘அங்கே குடுமித்தேவர் இருக்கிறார்; நாம் போய்க் கும்பிடுவோம்’’ என்றான்.

திருக்காளத்தி மலையை நெருங்க நெருங்க திண்ணனாருக்கு ஏதோ பெரிய சுமை இறங்குவது போலிருந்தது. அவரது உள்ளத்திலும் என்றுமே இல்லாததொரு இன்பம் தோன்றியது. இதற்கிடையில் மூவரும் பொன்முகலி ஆற்றங்கரையை வந்தடைந்தனர். காடனை தீக்கடைக் கோலினால் நெருப்புண்டாக்கி பன்றியை வதக்கும்படி கூறி அங்கே நிறுத்திவிட்டு, நாணனுடன் திண்ணனார் திருக்களத்தி மலையில் ஏறினார்.

திண்ணனார் மலை உச்சியை அடைந்ததும், அங்கே இருந்த சிவலிங்கப் பெருமானைக் கண்டார்; அன்பு மீதூரப் பெற்றார். ஓடிச் சென்று சிவலிங்கத்தைக் கட்டித் தழுவினார். தன்வசமிழந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். சுவாமி, கொடிய விலங்குகள் திரியும் காட்டின் மத்தியில் துணையின்றித் தனித்திருப்பதாக எண்ணி இரங்கினார். அவருக்கு உணவு கொடுப்பதற்கு யாரும் இல்லையே என்று கலங்கினார். சுவாமிக்கு வேண்டியவற்றைக் கொண்டுவர வேண்டும் என்று நினைத்தார். அதனால், அவரைப் பிரிய மனமில்லாதவராகப் பிரிந்து, கீழே சென்றார்.

திண்ணனார், காடன் இருக்கும் இடத்தை அடைந்தார். அங்கு வாட்டி, வதக்கியிலிருந்த பன்றியின் நல்ல இறைச்சியைத் தெரிந்து, தேக்கிலைக் கல்லையிலே வைத்தார்; பூக்களைக் கொய்து குடுமியிலே செருகினார்; பொன்முகலி ஆற்றுநீரை வாயிலே எடுத்துக் கொண்டார். வில், அம்பு என்பனவற்றை ஒரு கையிலும், இறைச்சிக் கல்லையை மறு கையிலும் எடுத்துக் கொண்டு திருக்காளத்திநாதரிடம் விரைந்து சென்றார்.

அங்கு சென்றதும், சிவலிங்கப் பெருமானின் முடி மீதிருந்த பூக்கள், இலைகளைக் காலால் அகற்றினார், வாயிலிருந்த நீரை உமிழ்ந்து சிவலிங்கப் பெருமானை நீராட்டினார்.

குடுமியில் செருகியிருந்த பூக்களை எடுத்துச் சாத்தினார். ஊனமுது படைத்து, அதை உண்ணும்படி வேண்டினார். இரவு முழுவதும் காட்டு விலங்குகளால் இறைவனுக்கு ஆபத்து ஏற்படா வண்ணம் கண் விழித்துக், காவல் செய்தார், விடிந்ததும் அவருக்கு உணவு கொண்டு வர, கீழே சென்றார்.

திருக்காளத்திநாதருக்குச் சிவாகம விதிப்படி தினமும் பூசை செய்பவர் சிவகோசரியார். அவர் வழக்கம் போல அவ்விடத்துக்கு வந்தார். அங்கிருந்த இறைச்சியைக் கண்டு மனம் வருந்தினார். அவ்விடத்தைத் தூய்மையாக்கி, முறைப்படி பூசை செய்தார். ஆனால், தொடர்ந்தும் திண்ணனார் இறைச்சியைப் படைத்து வந்தார். இவ்வாறு நடைபெறுவது சிவகோசரியாருக்குப் பெருங்கவலையாக இருந்தது. அதனால், மனம் வருந்தினார். இத்தகைய செயலை நீக்கும்படி சிவனை வேண்டினார்.

சிவன் அன்று இரவு சிவகோசரியார் கனவில் தோன்றி ''இந்தப் பொருத்தமற்ற பூசையைச் செய்பவன் வேடன் என்று இகழ்ச்சியாக நினைக்க வேண்டாம்; அவன் என்மீது கொண்ட அன்பினால் அவ்வாறு செய்கின்றான். அவனது செயல்கள் எனக்கு இனிதாக உள்ளன. நாளைக்கு மறைந்திருந்து பார். அப்போதுதான் அவனது அன்பைப் புரிந்து கொள்வாய். மனக்கவலையை விடுக'' என்றருளினார்.

மறுநாள் சிவகோசரியார் சிவனைப் பூசித்ததன் பின் ஓரிடத்தில் மறைந்திருந்தார். அன்று ஆறாவது நாள். சிவனின் வலக் கண்ணில் உதிரம் பெருகியதை வரும்போதே கண்ட திண்ணனார் பதறினார்; துடிதுடித்தார். பெருகும் இரத்தத்தைத் துடைத்தார். ஆனால் இரத்தம் நிற்கவில்லை. ஓடிச் சென்று பச்சிலைகளைப் பறிந்து வந்தார். அவற்றைப் பிழிந்து கண்ணில் விட்டார். குருதி வடிவது நிற்கவில்லை. ஊனுக்கு ஊன் உற்ற நோய் தீர்ப்பது என்பது அவரது நினைவுக்கு வந்தது. தனது வலக் கண்ணினை அம்பினால் தோண்டி எடுத்து, அந்த வலக் கண்ணில் அப்பினார்; குருதி வடிவது நின்றது. திண்ணனார் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார். அதே வேளை, திடீ-ரென இடது கண்ணிலும் உதிரம் கொட்டத் தொடங்கியது. திண்ணனார் பயப்படவில்லை. தனது இடது கண்ணைத் தோண்டி அப்ப நினைத்தார். அடையாளத்துக்காக அந்தக் கண்ணிடத்தில் தனது காலை வைத்துக் கொண்டு, இடது கண்ணைத் தோண்ட முயன்றார்.



அப்போது ‘‘நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப, என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப’’ என்று கூறிக் கொண்டே, சிவன் சிவலிங்கத்திலிருந்து தோன்றி, திண்ணனாரின் கையைத் தன் கையாற் பிடித்துத் தடுத்தார்.

இவற்றை எல்லாம் மறைவிடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்த சிவகோசரியார் வியப்படைந்தார். கண்ணப்பர் கைகளைப் பற்றிய காளத்தியப்பர், கண்ணப்பரைத் தன் வலப் பக்கத்தில் இருந்திக் கொண்டார். திண்ணனார் என்ற இயற்பெயர் கொண்ட வேட்டுவத்தலைவன், தனது பக்தியினால் இறைவனது கண்ணில் தனது கண்ணை அப்பியமையால், சிவபெருமானால் கண்ணப்பர் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார்.

பக்தன் பக்தியோடு செய்யும் பூசையானது ஆசாரம் இன்றி இருப்பினும், இறைவன் அதை ஏற்றுக் கொள்கின்றான். பக்தியே அதற்கு முக்கியம். பக்தியுடன் வழிபட்டால் இறைவன் பேரின்பத்தைத் தருவான். அவ்வாறே மன வலிமையுடைய வன்பக்தி ஊடாகவும் இறைவனை அடையலாம் என்பதற்கு கண்ணப்ப நாயனார் கதை சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திண்ணனார் என்பவர் யார்?
2. திருக்காளத்தி மலையில் உள்ள இறைவனுக்குப் பூசை செய்த சிவாச்சாரியார் யார்?
3. திண்ணனார் திருக்காளத்தியப்பருக்கு எவ்வாறு பூசை செய்தார் என்பதைச் சுருக்கமாகக் குறிப்பிடுக.

**02. தரப்பட்ட சொற்களை வைத்து, கீறிட்ட இடங்களை நிரப்புக**

குடுமித்தேவர், பூக்களை, கண்ணப்ப, பொன்முகலி

1. திருக்காளத்தி மலைக்கு அண்மையில் ............................ என்னும் பெயருடைய ஆறு பாய்கின்றது.
2. திருக்காளத்தி மலையில் உள்ள இறைவன் ............................ என்னும் பெயரால் அழைக்கப்படுவார்.
3. திண்ணனார், குடுமியில் செருகி இருந்த ............................ எடுத்து சிவலிங்கத்துக்குச் சாத்தினார்.
4. சிவன், ‘‘நில்லு ............................ என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப’’ என்று கூறி, திண்ணனாரின் கையைப் பிடித்துத் தடுத்தாட் கொண்டார்.

## செயற்பாடு

1. முதன்முறையாக திருக்காளத்தி மலையை அடைந்த திண்ணனார் எவ்வாறாகச் செயற்பட்டார் என்பதைப் பாவனையுடன் பேசி நடித்துக் காட்டுக.
2. திண்ணனார் தன்னலம் கருதாதவர்; இறைவனின் நலனையே பெரிதாக நினைத்தவர். இதற்கு நீங்கள் கூறும் மூன்று காரணங்களை எழுதி அதனை வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- திருக்காளத்தி மலையைக் கண்டதிலிருந்து திண்ணனார் இறை அருளுக்கு ஆளாயினார். சிவனடியார் ஒருவரிடம் காணப்படக்கூடிய அனைத்து இயல்புகளும் அவரிடம் இருந்தன.
- சிவாகம விதிப்படி பூசை செய்தல் சிவகோசரியார், திண்ணனாரின் படைப்பை ஏற்கவில்லை.
- சிவன், திண்ணனார் அன்புடனும் பக்தியுடனும் செய்த படைப்பை ஏற்றுக்கொண்டார்.
- சிவன், கண்ணப்பரின் அதிதீவிர அன்பையும் வன்பக்தியையும் உலகோர் அறியச் செய்தார்.
- இறைவன் திண்ணனாரை, கண்ணப்பராக்கி ஆட்கொண்டார்.
- ஆறு நாள்களில் அர்ப்பணிப்புடன் இறைபணி செய்து, இறைவனை அடைந்தவர் கண்ணப்ப நாயனார்.

# 10 பஞ்ச புராணம்

சைவ ஆலயங்களில், பூசைவேளையில் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்பன வரிசைக் கிரமத்தில் ஓதப்படுகின்றன. அவை 'பஞ்சபுராணம்' எனப்படும். பஞ்சபுராணத்தைப் ஓதிய பின்னர் திருப்புகழ் பாடும் வழக்கமும் உள்ளது.

ஆலயங்களில் மட்டுமன்றி, வீடுகளிலும் பாடசாலைகளிலும் பஞ்சபுராணம் ஓதப்படுகின்றது. வீட்டில் காலை, மாலை வழிபாடுகளின் போதும், விசேட வழிபாடுகளின் போதும் பாடசாலையில் காலைப் பிரார்த்தனை, வெள்ளிக்கிழமைப் பிரார்த்தனை, விழாக்கள் என்பன நடைபெறும் போதும் பஞ்சபுராணம் ஓதப்படுவதைக் காணலாம்.

உங்கள் பாடநூலில் உள்ள திருமுறைப் பாடல்களில் பஞ்சபுராணத்தை மனனம் செய்திருத்தல் அவசியமானதாகும். அவ்வாறு மனனம் செய்திருந்தால், வேண்டிய இடத்தில் உங்களால் பயமின்றி, பிழையறப் பாடமுடியும். பஞ்சபுராணம் ஓதும்போது. முதலில் 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்வதும், அவற்றை ஓதிய பின் 'திருச்சிற்றம்பலம்' என்று கூறி நிறைவு செய்வதும் சைவமரபாகும். அவ்வாறே, பஞ்சபுராணத்தை எழுதும்போதும், முதலில் 'திருச்சிற்றம்பலம்' என்று எழுதுவதும், அதனை எழுதிய பின்னா 'திருச்சிற்றம்பலம்' என்று எழுதி நிறைவு செய்வதும் மரபாகும். பஞ்சபுராணத்தைப் பாடும்பொது எழுந்த நின்று. கைகூப்பி, பக்தியோடும், பண்ணோடும் ஓத வேண்டும்.

பஞ்சபுராணத்திலுள்ள தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்பனவும் அவற்றைப் பாடியவர் பெயர், தலம், பாடப் பெற்ற சந்தர்ப்பம், பண் என்பன பற்றிய குறிப்புகளும் தனித்தனியே தரப்பட்டுள்ளன. அவற்றைப் படித்துப் பயன் பெறுங்கள்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பஞ்சபுராணம் என அழைக்கப்படுபவை எவை?
2. பஞ்சபுராணம் ஓதப்படும் சந்தர்ப்பங்கள் மூன்றினைத் தருக.
3. 'திருச்சிற்றம்பலம்' எவ்வெப்போது சொல்லப்படும்?
4. பஞ்சபுராணத்தை ஓதும் போது கவனிக்க வேண்டிய ஒழுங்குமுறைகள் மூன்றினைக் குறிப்பிடுக.

**02. சரியான சொல்லைக் கொண்டு வெற்றிடங்களை நிரப்புக.**

மனனம், பஞ்சபுராணம், தேவாரம், திருப்புகழ்

1. பஞ்சபுராணம் ஓதும் போது ....................................... முதலில் பாடப்படும்.
2. பஞ்சபுராணம் ஓதிய பின்னர் .............................. பாடும் வழக்கு உள்ளது.
3. ............................ ஆலயங்கள், வீடு, பாடசாலை ஆகிய இடங்களில் பாடப்படும்.
4. பஞ்சபுராணத்தை ............................ செய்திருத்தல் நன்று.

## செயற்பாடு

1. பஞ்சபுராணத்தை மனனம் செய்க. எழுந்து நின்று கைகூப்பி, பக்தியோடும் பண்ணோடும் அதனைப் ஓதிக் காட்டுக.

### பாடச்சுருக்கம்

- தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்பன பஞ்சபுராணத்தில் அடங்கும்.
- பஞ்சபுராணம், கோயில், வீடு, பாடசாலை போன்ற இடங்களில் ஓதப்படும்.
- பஞ்சபுராணம் ஓத முன்பும் ஓதிய பின்பும் 'திருச்சிற்றம்பலம்' எனச் சொல்ல வேண்டும்.
- பஞ்சபுராணம் எழுதமுன்பும், எழுதியபின்பும் 'திருச்சிற்றம்பலம்' எழுத வேண்டும்.
- பஞ்சபுராணம் ஓதும் போது கவனிக்க வேண்டிய ஒழுங்குமுறைகள் பல உள்ளன.

## (அ) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் - தேவாரம்

### பாடல் - 01

உமையம்மையார் ஊட்டிய ஞானப்பாலை உண்ட மூன்று வயதுக் குழந்தை, 'தோடுடைய செவியன்' என்று தொடங்கும் தேவாரப் பதிகத்தைப் பாடத் தொடங்கியது. அது ஞானசம்பந்தம் பெற்ற குழந்தை ஆதலால், ஞானசம்பந்தர் எனப் பெயர் பெற்றது. 'தோடுடைய செவியன்' என்ற தேவாரம் அவரால் முதலாவதாகப் பாடப்பட்டதாகும்.

தலம் - சீர்காழி பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மா னிவனன்றே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

சிவபெருமான் தோடு அணிந்த காதினை உடையவராய் இடப வாகனத்தில் வீற்றிருந்தார். தூய வெண்ணிறமுடைய மூன்றாம் பிறைச்சந்திரனைத் தலையிலே சூடியிருந்தார். சுடுகாட்டுச் சாம்பலைத் திருமேனியிற் பூசியிருந்தார். அவர் எனது உள்ளத்தைக் கவர்ந்துள்ளார். பல இதழ்களைக் கொண்ட தாமரைப்பூவின் மேல் வீற்றிருப்பவரான பிரமா முற்காலத்தில் வணங்கித் துதிக்க, அவருக்கு அருள் புரிந்தவர். பெருமை உடைய பிரமாபுரம் என அழைக்கப்படும் சீர்காழித் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமான் அவரல்லவோ?

### பத விளக்கம் :

விடை - இடபம்; வெண்மதி - வெண்ணிறமுடைய மூன்றாம் பிறை; காடு - சுடுகாடு பொடி - சாம்பல்; ஏடு - மலர் இதழ்; ஏடுடைய மலரான் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமா; பணிந்து - வணங்கி; ஏத்த - துதிக்க; பீடு - பெருமை, புகழ்; பிரமாபுரம் - சீர்காழியின் மறுபெயர்.

### பாடல் - 02

திருக்கேதாரம், உமாதேவியார் சிவபிரானைப் பூசித்து அவரது இடப் பாகத்தில் இருக்கும் பேறு பெற்ற தலமாகும். இத்தலம் வட இந்தியாவில் இமயமலைச் சாரலில் உள்ளது. திருஞானசம்பந்தர், திருக்காளத்தித் தலத்தில் இருந்தபோது, திருக்கேதாரத்தைப் பற்றிக் கேள்வியுற்று, அத் தலத்தை மானசீகமாகத் துதித்துப் பதிகம் பாடினார்.

தலம் - திருக்கேதாரம் பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சு களிறும் அடக்கிச் சுரும்பார் மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ள வரிக்
கொண்டைபாயச் சுனைநீல மொட்டலருங்கேதாரமே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

வண்டுகள் பாடவும், மயில்கள் ஆடவும், மான்கன்றுகள் துள்ளவும், அழகிய வரிகளையுடைய கெண்டை மீன்கள் பாயவும், குளத்திலே நிலோற்பல மொட்டுக்கள் விரியும் இடத்தில் அமைந்துள்ள தலம் திருக்கேதாரம் ஆகும். அத்தலமானது அடியவர்கள் தமது ஐம்பொறிகளாகிய யானையை அடக்கி, வண்டுகள் மொய்க்கும் பூக்களைத் தலைமாலையாகக் கட்டி, பூமாலை கட்டும் தொண்டைச் செய்து, இறைவனை வழிபடும் இடம் என ஞானியர் கூறுவர்.

### பத விளக்கம்

தொண்டர் - அடியவர்: அஞ்சு - ஐம்பொறிகள் (மெய், வாய், கண், மூக்கு, செவி); களிறு - ஆண் யானை; சுரும்பு - வண்டு; இண்டை - தலை மாலை; என்பவரால் - என்பர். (ஆல் - அசை) அஞ்சு - களிறு - ஐம்பொறிகளாகிய மதங்கொண்ட ஆண் யானை (உருவகம்) சுனை - குளம்; நீலம் - நீலோற்பலம்.

## (ஆ) திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்

### பாடல் - 01

தேவார முதலிகள் மூவருள் திருநாவுக்கரசு நாயனாரும் ஒருவர். சூலைநோய் காரணமாக அவர் தாங்கொணாத் துன்பமடைந்தார். சமணர் அவருக்குச் செய்த வைத்தியம், மந்திரம், தந்திரம் என்பவற்றால் நோய் மேலும் அதிகரித்தது. அந்நிலையில் சமணர்களால் கைவிடப்பட்ட அவர், ஒருவரும் அறியாமல் தம் தமக்கையாரிடம் சென்றார். தமக்கையார் அவருக்குத் திருவைந்தெழுத்து ஓதித் திருநீறு கொடுக்க, அவர் அதனை உடல் முழுவதும் அணிந்தார். தமக்கையார், தம் தம்பியை அழைத்துக் கொண்டு திருவீரட்டானேச்சுரர் சந்நிதிக்குச் சென்றார். நாவுக்கரசர் அங்குள்ள இறைவனைப் போற்றி, ‘‘கூற்றாயினவாறு......’’ என்று தொடங்கும் இப்பதிகத்தைப் பாட, அவரது சூலை நோய் நீங்கியது. இது அவரால் முதலில் பாடப்பட்ட தேவாரமாகும்.

**தலம்** - திருவதிகை வீரட்டானம் **பண்** - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்றா யடிக்கே இரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்றா தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை :

திருக்கெடிலம் என்னும் ஆற்றிற்கு வடபால் விளங்கும் திருவதிகை என்னும் தலத்திலே எழுந்தருளியிருக்கும் வீரட்டானேச்சுரப் பெருமானே! யமன் போன்று இருக்கும் தன்மையை விலக்கவில்லை. தீயசெயல்கள் பலவற்றை இப்பிறப்பில் செய்திருப்பதை நான் அறியேன். உமது திருவடிகளை அடியேன் எப்பொழுதும் நினைந்து வணங்குவேன். வெளியே தெரியாது எனது வயிற்றின் உள்ளே சூலைநோய் குடலைக் கட்டி முறுக்கி வேதனை தருவதை உமது அடியவனாகிய என்னால் தாங்க முடியவில்லை. ஆதலால், என் நோயை நீக்கி ஆட்கொள்வீராக.

## பத விளக்கம்

**கூற்று** - யமன்; **கொடுமை** - தீய செயல்கள்: **தோற்றாது** - வெளியே தெரியாது (வயிற்றுக் குடலை வருத்தும் சூலைநோய் வெளியே தெரியவில்லை); **ஆற்றேன்** - தாங்க முடியவில்லை (சூலை நோயின் தாக்கத்தை); **அதிகை** - திருவதிகை.

## பாடல் - 02

திருவைந்தெழுத்தின் சிறப்புகளைக் கூறுவது நமச்சிவாயப் பதிகமாகும். சைவ நாயன்மார் நால்வரும் (சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்) நமசிவாய என்னும் திருவைந்தெழுத்தின் மகிமை பற்றிப் பாடியுள்ளனர். பின்வருவது, நாவுக்கரசரால் பாடப்பட்ட நமச்சிவாயப் பதிகத்தில் உள்ள தேவாரமாகும். எந்தத் தலத்தின் மீதும் பாடப்படாத காரணத்தால், இதனைப் **'பொதுப் பதிகம்'** என்பர். இது அவரைக் கல்லோடு கட்டிக் கடலில் போட்டபோது பாடிய நமச்சிவாயத் திருப்பதிகத்தில் உள்ள ஒரு பாடலாகும்.

தலம் - பொது பண் - காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

பூக்கள் சிறப்பானது பொலிவுள்ள தாமரை மலராகும். பசுக்களுக்குச் சிறப்பாக அமைவது இறைவனின் அபிடேகத்துக்கு அவை தரும் பஞ்சகௌவியங்களாகும். அரசனுக்கு அருங்கலமாவது ஆட்சியில் நடுநிலையைக் கடைப்பிடித்தலாகும். அவ்வாறு நாவுக்குச் சிறப்பாக அமைவது ந,ம,சி,வா,ய என்னும் திருவைந்தெழுத்தை உரைத்தலாகும்.

### பத விளக்கம்

**அருங்கலம்** - சிறப்பு; **பொங்கு** - பொலிவு; **ஆ** - பசு; அரன் - இறைவன்; அஞ்சு - பஞ்சகௌவியம் (கோசலம், கோமயம், பால், தயிர், நெய்) கோ - அரசன்; கோட்டம் - கோணல்; இல்லது - இல்லாமை; கோட்டமில்லது - கோணல் இல்லாமை, நடுவுநிலை.

## (இ) சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்

### பாடல் - 01

இறைவன் சுந்தரரது திருமணநாளின் போது, கிழப்பிராமண வடிவம் தாங்கி வந்து, அவரைத் தடுத்தாட்கொண்டார். பின்னர் திருவெண்ணெய் நல்லூர் என்ற தலத்துக்கு, சுந்தரரை அழைத்துச் சென்றார். அங்கு கிழப்பிராமண வடிவில் வந்த இறைவன் மறைந்தருளினார். தம்மைத் தடுத்தாட்கொள்ள வந்தவர் இறைவனே என்பதை அறிந்த சுந்தரர் மனமுருகி நின்றார். அப்போது இறைவன், ‘‘நம்மைச் செந்தமிழாற் பாடுக’’ என்று திருவாய்மலர்ந்தருளினார். சுந்தரர், இறைவனைப் ‘‘பித்தா’’ என்று ஏசிய சொல்லையே முதலாகக் கொண்டு இப்பதிகத்தை பாடினார். இது சுந்தரரால் பாடப்பட்ட **முதலாவது** தேவாரமாகும்.

தலம் - திருவெண்ணெய் நல்லூர் பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

பித்தா பிறை சூடிபெரு மானேயரு ளாளா
ஏத்தான் மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரட் டுறையுள்
அத்தாஉனக் காளாய்இனி அல்லேனென லாமே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை :

பித்தனே! சந்திரனைச் சூடியவரே, எங்கள் பெருமானே, அருள் உடையவரே, பெண்ணை நதியின் தென்பால் உள்ள திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி இருக்கும் தந்தையே, நான் உன்னை ஒருபோதும் மறக்கமாட்டேன்; எப்போதும் நினைக்கின்றேன். நீரும் என்னை உன் மனதுள் வைத்தாய். நான் உனக்கு அடிமையாகிவிட்டேன். இனி ஒருபோதும், ''நான் உனது அடிமை அல்லன்'' என்று சொல்லமாட்டேன்.

## பத விளக்கம்

**பிறைசூடி** - பிறைச்சந்திரனைத் தலையில் சூடிய சிவன்; **ஆளாய்;** அடிமையாய் - **அத்தா** - தலைவனே, தந்தையே.

## பாடல் - 02

சுந்தரர் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு வந்தார். ஒருநாள் இரவு, அவர் நித்திரை செய்யும்போது சிவபெருமான் கனவில் தோன்றினார். ''மழபாடிக்கு வருவதற்கு மறந்தாயோ'' என்று வினாவினார். சுந்தரர் நித்திரை விட்டு எழுந்து. திருமழபாடிக்குச் சென்றார். அங்குள்ள இறைவனை வணங்கி, பாடியருளியது இத் திருப்பதிகம்.

தலம் - திருமழபாடி பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொன்னார் மேனியனே புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

பொன் போன்ற திருமேனியை உடையவரே, இடையில் புலித்தோலை உடுத்து, மின்னல் போன்ற சடையில் விளக்குகின்ற கொன்றை மாலையை அணிந்தவனே. தலைவனே, விலை உயர்ந்த இரத்தினம் போன்றவனே, திருமழபாடியுள் திகழும் மாணிக்கும் போன்றவரே, வனக்குத் தாய் போல் விளங்குபவரே, இப்போது உன்னை அல்லாது வேறு யாரை நான் நினைப்பேன்.

### பத விளக்கம்

**மேனி** - திருமேனி; **அரை** - இடை; **அசைத்து** - உடுத்து; **மன்** - தலைவன்; **மாமணி** - இரத்தினம்; அன்னை - **தாய்.**

## (ஈ) திருவாசகம்

சைவ சமய குரவர்களுள் மாணிக்கவாசக சுவாமிகளும் ஒருவர், அவரால் பாடப்பட்ட பாடல்கள் திருவாசகம், திருக்கோவையார் என்பவையாகும். அவை எட்டாந் திருமுறையில் அடங்குகின்றன. திருவாசகத்தில் திருச்சாழல் என்னும் பகுதியில் உள்ள பாடல் ஒன்று கீழே தரப்பட்டுள்ளது.

திருச்சிற்றம்பலம்

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலும் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

இறைவன் பூசிக்கொள்வது வெண்ணீறாகும். ஆபரணமாக அணிவது சீறுகின்ற பாம்பாகும். பேசுவது வேதமாகும். இவ்வாறு பூசுவதும் அணிவதும் செய்வதனால் எல்லா உயிர்களுக்கும் உள்ள வடிவையே தாமும் வடிவாகக் கொண்டுள்ளான் என்று, சாழல் கொட்டி விளையாடுவோம்.

### பத விளக்கம்

**பூண்பது** - (ஆபரணமாக) அணிவது; **அரவம்** - பாம்பு; **மறை** - வேதம்; **காணேடீ** - (தோழியே) காண்பாயாக; சாழல் - மகளிர் விளையாட்டுகளில் இது ஒருவகை. சாழல் விளையாட்டில் மகளிர் பாடுவது போன்று இப்பாடல் முறையும் அமைந்து காணப்படுகின்றது.

## (உ) திருவிசைப்பா

திவிசைப்பா என்பது இறைவனின் பெருமையைப் பாடுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய இசைப்பாடல் என்று பொருள்படும், சைவத் திருமுறைகள் பன்னிரெண்டில், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னுமிரண்டும் ஒன்பதாந் திருமுறையில் அடங்குகின்றன. திருமாளிகைத்தேவர் சேர்ந்தனார். கருவூர்த்தேவர் முதலிய ஒன்பதின்மர் திருவிசைப்பாக்களைப் பாடியுள்ளனர். அவற்றுள் திருமாளிகைத் தேவர் பாடிய ''ஒளிவளர் விளக்கே'' என்னும் திருவிசைப்பா அடியார் களால் மிகவும் விரும்பிப் பாடப்படுவதாகும்.

தலம் - கோயில் (தில்லை) பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

ஒளி மிகுகின்ற விளக்கே, அழிவற்ற ஒப்பில்லாத பொருளே, சுட்டி அறியும் அறிவுக்கும் அப்பால் நின்று, சிவஞானத்தால் அறியக்கூடிய பேரறிவே, ஒளிபொருந்திய பளிங்கின் பேரொளியினை உடைய மாணிக்கமலையே, மனத்தின் கண்ணே, இனிக்கும் தேன் போன்றவரே, அன்புடைய மெய்யன்பர்களது உள்ளத்தின்கண் பேரானந்தத்தை விளைவிக்கும் கனியே.

சிற்றம்பலத்திலுள்ள பொன்னம்பலத்தையே ஆனந்த நடன அரங்கமாகக் கொண்டு, தெய்வீக நடனத்தைச் செய்யும் உன்னை, அடியவனாகிய நான் புகழ்ந்து. வியந்து உரைப்பது எவ்வாறு என்பதைக் கூறியருள்வாயாக.

### பத விளக்கம்

**உலப்பு** - அழிவு; **உணர்வு** - சுட்டி அறியும் அறிவு; **மணி** - மணிக்கம்; **ஆனந்தக் கனி** - இனிபத்தைத் தருகின்ற கனி; **அம்பலம்** - சிற்றம்பலம்; **அரங்கு** - மேடை, சபை; **தெய்வக் கூத்து** - ஆனந்த நடனம்; **விளம்பு** - உரை, கூறு; சித்தம் - மனம்.

### (ஊ) திருப்பல்லாண்டு

திருப்பல்லாண்டு ஒன்பதாந் திருமுறையில் அடங்கும். திருப்பல்லாண்டு என்பது. ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனை, 'பல்லாண்டு வாழ்வாயாக' என வாழ்த்திப் பாடுகின்ற திருப்பாடல்களாகும். அது தில்லை, (கோயில்) என அழைக்கப்படும் சிதம்பரத்தில். திருவாதிரைத் திருநாளில் ஓடாது நின்ற தேரை ஓடச் செய்யச் சேந்தனாரால் பாடப்பட்டது.

தலம் - கோயில் பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

சீரும் திருவும் பொலியச் சிவலோக
நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன்
பெற்றதார் பெறுவார் உலகில்
ஊரு முலகுங் கழற வுழறி
உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும் பரிசுநாம்
பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

பெருமையும், செல்வமும் கொண்டு விளங்குகின்ற தில்லைச் சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனது திருவடிகளின் கீழ்த் தொண்டு புரிந்து. (உலகில்) வேறெவரும் பெறாத மெய்ஞ்ஞான அறிவை நான் பெற்றேன். அவ்வாறாக வேறு யார் பெறுவார்? ஆகவே, ஞானத்தைப் புகழ, அன்பின் மிகுதியால் நாக்குழறி, உமாதேவியின் மணவாளனுக்கு நான் அடிமை என்று கூறி, பூமியிலுள்ளோரும், விண்ணிலுள்ள தேவர்களும் அறியும்படி, அவரைப் 'பல்லாண்டு வாழ்வாயாக' என்று வாழ்த்துவோமாக.

### பத விளக்கம்

**சீர்** - பெருமை; திரு - செல்வம்; **பொலிய** - விளங்க; **சிவலோக** நாயகன் - தில்லையில் எழுந்தருளியுள்ள இறைவன்; **அறிவு** - மெய்ஞ்ஞானம்; **ஆரும்** - வேறெவரும்; **பெற்றது** - நான் பெற்ற அறிவை; **ஊர்** - ஊரில் உள்ள மக்கள், **உலகு** - உலகு மக்கள்; **கழற** - நான் பெற்ற ஞானத்தைப் புகழ; **உழறி** - அன்பின் மிகுதியால் நான் நாக்குழறி; **உமை மணவாளனுக்கு** - உமாதேவியின் மணவாளனாகிய இறைவனுக்கு; **ஆள் என்று** - அடிமை என்று; பார் - பூமி; **விசும்பு** - ஆகாயம்; **அறியும் பரிசு** - பூமியிலுள்ளாரும் தேவர்களும் அறியும்படி; **பல்லாண்டு கூறுதும்** - பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துவோமாக.

## (எ) பெரியபுராணம்

கோயில்களில் பஞ்சபுராணம் பாடும் போது தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு பாடிய பின்னர் பெரியபுராணம் பாடப்படும். சைவத் திருமுறைகளுள் பெரியபுராணம் பன்னிரெண்டாவதாகும். அது திருத்தொண்டர் புராணம் எனவும் அழைக்கப்படும். பெரியபுராணம் சேக்கிழார் சுவாமிகளால் இயற்றப்பட்டது. அவர் பெரிய புராணத்தைப் பாடுவதற்கு. ''உல்கெலாம்'' என்னும் முதலடியை எடுத்துக் கொடுத்தவர் சிவபெருமான். சேக்கிழார் சுவாமிகள் அந்த அடியை முதலாகக் கொண்டு பெரியபுராணத்தைப் பாடினார்.

திருச்சிற்றம்பலம்

உலகே லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை :

உலகத்தோர் எல்லோரும் அறிந்து துதிப்பதற்கு அரியவனும், பிறைச்சந்திரனையும், கங்கா நதியையும் சடாமுடியிலே தரித்தவனும், அளவில்லாத சோதி வடிவானவனும், தில்லையிலுள்ள சிற்றம்பலத்திலே ஆனந்த நடனமாடுகின்றவனும் ஆகிய சிவபெருமானின் மலர்ந்த திருவடிகளை வாழ்த்தி, வணங்குவோமாக.

### பத விளக்கம்

**நிலவு** - சந்திரன்: **நீர்** - கங்கை; **வேணி** - சடாமுடி; **அலகில் சோதி** - எல்லையில்லா **ஒளி; அம்பலம்** - தில்லைச் சிற்றம்பலம்; **சிலம்படி** - ஒலிக்கின்ற திருவடி.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருக்கேதாரம் என்னும் தலத்தின் அமைவிடம், சிறப்பு என்பவற்றை எழுதுக.
2. ''தேவாரங்களைப் பாடிய நாயன்மார் நோய் நீக்கினர்'' இதற்கு உதாரணம் தருக.
3. திருப்பல்லாண்டு என்பதன் பொருள் விளக்கம் யாது?
4. பெரியபுராணம் வேறு எவ்வாறு அழைக்கப்படும் ?

## செயற்பாடு

1. நால்வரும் 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தைப் பற்றிப் பாடியுள்ளனர் என்பதற்கு நீங்கள் காட்டும் ஆதாரங்களைக் அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

2. பின்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

| பாடல் முதலடி | பாடியவர் | நூலின் பெயர் | தலம் | பண் |
|---|---|---|---|---|
| 01. ‘‘தோடுடைய செவியன்.’’ | ............ | தேவாரம் | ............ | .......... |
| 02. ‘‘தொன்டரஞ்சு....’’ | ............ | ............ | ............ | .......... |
| 03. ‘‘கூற்றா யினவா...’’ | ............ | ............ | ............ | .......... |
| 04. ‘‘பூவினுக் கருங்கலாம்...’’ | ............ | | பொது நமச்சிவாயப் பதிகம் | .......... |
| 05. ‘‘பித்தா பிறை சூடீ....’’ | ............ | ............ | ............ | .......... |
| 06. ‘‘பொன்னார். மேனியனே...’’ | ............ | ............ | ............ | .......... |
| 07. ‘‘பூசுவதும்...’’ | ............ | ............ | எட்டாந். திருமுறை | .......... |
| 08. ‘‘ஒளிவளர் விளக்கே...’’ | ............ | ............ | ............ | .......... |
| 09. ‘‘சீரும் திருவும்...’’ | ............ | ............ | ............ | .......... |
| 10. ‘‘உலகெலாமுணர்ந்து...’’ | ............ | ............ | பன்னிரெண்டாம் திருமுறை | |

## பாடச்சுருக்கம்

- திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவாரமுதலி மூவராலும் தேவாரம் பாடப்பட்டது.
- மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாசகம் எட்டாம் திருமுறையில் அடங்கும்.
- தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்பன ஒழுங்கு முறையில் ஓதப்படும். அவை பஞ்சபுராணம் எனப்படும்.

# 11 தோத்திரப்பாடல் - திருப்புகழ்

சைவத் திருமுறைகள் தொகுக்கப்பட்டதன் பின்பு, பாடப்பட்ட பாடல்கள் தோத்திரப் பாடல்கள் எனப்படும். தோத்திரப் பாடல்களுள் திருப்புகழ், கத்தரணுபூதி, கந்தரலங்காரம், அபிராமி அந்தாதி முதலியன அடங்கும். திருப்புகழைப் பாடியவர் அருணகிரிநாதர் ஆவார். அவர் முருகப் பெருமானின் புகழைப் பலவகையிலும் புகழ்ந்து பாடிய பாடல்களின் தொகுப்பே திருப்புகழ் ஆகும். திருப்புகழ்ப் பாடல்கள் சந்தப் சிறப்பு, தாளச் சிறப்பு மிக்கவை. அருணகிரிநாதர் பாடிய பொதுத் திருப்புகழ்களில் ஒன்று இங்கே தரப்படுகின்றது.

இசைந்த ஏறும் கரியுரி போர்வையும் எழில் நீறும்
இலங்கு நூலும் புலியத ளாடையும் மழுமானும்
அசைந்த தோடுஞ் சிரமணி மாலையும் முடிமீதே
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய குருநாதா
உசந்த சூரன் கிளையுடன் வேரற முனிவோனே
உகந்த பாசங் கயிறொடு தூதுவர் நலியாதே
அசந்த போதென் துயர்கெட மாமயில் வரவேணும்
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமாளே.

## பொழிப்புரை :

பொருந்திய இடப வாகனமும், யானைத் தோல் போர்வையும், அழகிய திருநீற்றுப் பூச்சும், விளங்குகின்ற முப்புரிநூலும், புலித்தோல் ஆடையும், கையில் மழுவும் மானும், காதில் அசையும் தோடும், முடி மீது அழகிய தலைமாலையும் சூடியிருக்கின்ற சிவ-பெருமான் அன்புடன் வணங்கிக் கீழே இருக்க. அவருக்கு மேலே இருந்து பிரணவமந்திரத்தை உபதேசஞ் செய்த சிவகுருவே, சாத்திய வேலானது தோள்மீது பொருந்தியிருக்கின்ற முருகப் பெருமானே, பல வரங்களைப் பெற்று உயர்ந்த சூரனை, அவன் சுற்றத்துடன் அழியும்படி கோபித்தவரே, பாசக் கயிற்றை விருப்புடன் கையில் பிடித்த இயம தூதுவர் என்னை (மரண வேதனையில்) வருத்தாமல், அடியேன் அயர்வுற்றிருக்கும் பொழுது, அடியேனுடைய துன்பத்தை நீக்குவதற்கு, (நீ) பெரிய மயில் மீது ஏறி, என் முன்னே வந்தருளல் வேண்டும்.

## பத விளக்கம்

**ஏறு** - இடப வாகனம்; **கரி** - யானை; **எழில்** - அழகு, அழகிய; நூல் - முப்புரி நூல்; **சிரம்** - முடி; **அணிந்த** - சூடி இருக்கின்ற; ஈசன் - இறைவன், சிவபெருமான்; **பரிவு** - அன்பு; **உசந்த** - உயர்ந்த; **முனிவு** - கோபம்; **தூதுவர்** - இயம தூதுவர்; **கயிறு** - பாசக்கயிறு; **நலியாது** - வருத்தாது: **துயர்** - துன்பம்; **கெட** - நீக்க; **மா** - பெரிய; **புயம்** தோள்; **புலிய-தள்** - புலித்தோல்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. தோத்திரப் பாடல்கள் என்றால் என்ன?
2. தோத்திரப் பாடல்களுள் அடங்கும் மூன்று நூல்களின் பெயர்களைத் தருக.
3. திருப்புகழின் ஆசிரியர் யார்?
4. திருப்புகழில் உள்ள சிறப்புகளைக் குறிப்பிடுக.
5. சிவகுரு என்று போற்றப்படுபவர் யார்?

## செயற்பாடு

1. பாடநூலில் தரப்பட்டுள்ள திருப்புகழை மனனம் செய்து பாடிக்காட்டுக.
2. இலங்கையில் கதிர்காமத் தலத்தின் மீது பாடப்பட்ட வேறு திருப்புகழ்ப் பாடல்களை எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- தோத்திரப்பாடல்கள் என்பவை, சைவத் திருமுறைகள் தொகுக்கப்பட்டதன் பின் பாடப்பட்ட பாடல்களாகும்.
- தோத்திரப் பாடல்களுள் திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம், அபிராமி அந்தாதி முதலானவை அடங்கும்.
- அருணகிரிநாதர் திருப்புகழைப் பாடினார்.
- திருப்புகழ்ப் பாடல்கள் சந்தச் சிறப்பு, தாளச் சிறப்பு மிக்கவை.

# 12 ஆலய வழிபாடு

இறைவன் எங்கும் இருக்கின்றார். அவரை எங்கும் வணங்கலாம். ஆயினும், இறைவன் ஆன்மாக்களின் வழிபாட்டை ஏற்று அருள்புரியும் இடம் ஆலயம் என்பதால், அங்கு சென்று கடவுளை வணங்குவதே சிறப்பானதாகும். ஆலயம் என்பதற்கு ஆன்மா லயப்படும் இடம் எனப் பொருள் கூறுவர்.

நாம் தினமும் ஆலயத்துக்குச் சென்று வழிபடுதல் நன்று. தினமும் செல்ல முடியாதவர்கள் செவ்வாய்க்கிழமை வெள்ளிக்கிழமை, மாதப்பிறப்பு, தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு முதலான விசேட தினங்களிலாவது ஆலயத்துக்குச் சென்று வழிபடுதல் வேண்டும்.

ஆலயம் புனிதமான இடம், ஆதலால் ஆலயத்துக்குச் செல்ல முன் நீராடி, தோய்த்து உலர்ந்த ஆடைகளை அணிந்து விபூதி தரித்துத் தூய்மையுடன் செல்லுதல் வேண்டும். பழம், பாக்கு, வெற்றிலை, கர்ப்பூரம், தேங்காய், பால், இளநீர், பூக்கள் முதலான பூசைப் பொருட்களைத் தூய்மையான தட்டில் வைத்து, அரைக்கு மேலே தாங்கிக் கொண்டு, இறை சிந்தனையுடன் ஆலயத் துக்குச் செல்லுதல் வேண்டும்.



ஆலயத்தை அண்மித்ததும், முதலில் கோபுரத்தை வணங்க வேண்டும். அதன் பின் அங்குள்ள நீர் நிலைகளில் கால்களைக் கழுவிச் சுத்தம் செய்து, சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டு, உள்ளே செல்ல வேண்டும். அங்கு பலிபீடத்துக்கு இப்பால் ஆண்கள் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும். பின்னர், நந்தி தேவரை வணங்கி அனுமதி பெற்று, முதலில் விநாயகப் பெருமானை வணங்க வேண்டும். அவரை வணங்கும் முறை பற்றி, 'விநாயகர்' என்ற பாடத்தில் படித்துள்ளோம்.

விநாயகரை வணங்கியபின், மூலமூர்த்தியாகிய சிவலிங்கப் பெருமானையும், உமா தேவியாரையும் வணங்கி, விபூதி வாங்கித் தரித்துக் கொண்டு. அதன் பின் நடராஜப் பெருமான், தட்சணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சுப்பிரமணியர், வைரவர் முதலிய மூர்த்திகளையும் வணங்க வேண்டும். இறுதியில் சண்டேசுவரைக் கும்பிட்டு, மூன்று முறை கைகொட்டி, சிவதரிசன பலனைத் தரும்படி பிரார்த்தித்து. பின் சிவசந்தியை அடைந்து வணங்க வேண்டும். அதன் பின் அமைதியான ஓர் இடத்தில் இருந்து, திருவைந்தெழுத்தைச் செபிக்க வேண்டும்.

சுவாமி சன்னிதிகளில் அவ்வவ் மூர்த்திகளை வணங்கும் போது, இரண்டு கைகளையும் மார்பிலும் அல்லது சிரசிலும் குவித்துக் கொண்டு தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைப் பாடல்களை ஓதுதல் வேண்டும். இறை நாமங்களையும் உச்சரித்தலும் நன்று. அவை யாவும் பிறர்க்கு இடையூறு இல்லாதவகையில் செய்தல் அவசியமாகும்.





ஆலயத்தில் செய்யக்கூடிய தொண்டுகள் பல உள்ளன. அவற்றுள் கோயிலைக் கூட்டுதல், கழுவுதல், பாத்திரங்கள், மணி என்பவற்றை விளக்குதல், தூபமிடுதல், விளக்கேற்றுதல், சாமரை வீசுதல், தீவர்த்தி பிடித்தல், குடை ஆலவட்டம் கொடி என்பவற்றைப் பிடித்தல் என்பன குறிப்பிடத்தக்கவையாகும்.





பூந்தோட்டம அமைத்தல் பூந்தோட்டத்துக்கு நீர் ஊற்றல், பூக்கொய்தல், பூமாலை கட்டுதல் என்பனவும் ஆலயத் தொண்டுகளில் அடங்கும். அவை சிவ புண்ணியச் செயல்களாகும். நீங்களும் அவ்வாறான செயல்களைச் செய்ய முன்வர வேண்டும்.

ஆலயத்துக்குச் சென்று வழிபடுவதனால், நமது ஐம்பொறிகளும் ஒடுங்கி, இறைவனை நாம் நினைப்பதற்கு வழியேற்படுகின்றது மேலும், ஆலயங்களில் தெய்வ அருள் நிறைந்திருப்பதால், அங்கு எமது மனம் அமைதி பெறும்; வாழ்வு வளம் பெறும், ஆன்மா ஈடேற்றம் அடையும்.

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று'

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஆலயம் என்பதன் பொருள் யாது?
2. நீங்கள் ஆலயத்துக்குச் செல்லும் விசேட தினங்கள் மூன்று தருக.
3. ஆலயத்துக்குச் செல்ல முன், நீங்கள் செய்ய வேண்டியவை யாவை?
4. ஆலயத்தில் செய்யப்படும் நமஸ்கார முறைகள் இரண்டையும் குறிப்பிடுக.
5. ஆலயத்தில் நீங்கள் செய்யும் தொண்டுகள் ஐந்தினை எழுதுக.

02. **கீழே தரப்பட்டுள்ள சொற்களை வைத்து, வெற்றிடங்களை நிரப்புக.**

சண்டேசுரர், பஞ்சாங்க, திருமுறைப் பாடல்கள், விநாயகர், பூசைப் பொருட்ருகள்

1. ஆலய வழிபாட்டில் முதலில் வழிபடும் தெய்வம் ........................... தெய்வம் ........................... ஆவார்.
2. பழம், பாக்கு, வெற்றிலை, கற்பூரம், தேங்காய் என்பன ........................... என அழைக்கப்படும்.
3. ஆலய வழிபாடு செய்யும்போது பெண்கள் ........................... நமஸ்காரம் செய்ய வேண்டும்.
4. சுவாமி சந்நிதியில் ........................... ஓதுதல் வேண்டும்.
5. சிவதரிசன பலனை ........................... தருபவர் ........................... ஆவார்.

## செயற்பாடு

1. ஆலயத்துக்குச் செல்லுமுன் செய்யவேண்டிய முன் ஆயத்தங்களைப் படிமுறையாக எழுதி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. ஆசிரியருடன் கோயிலுக்குச் செல்க. அல்லது வகுப்பறையை, கோயிலின் உட்பகுதியாக நினைத்து, அங்கு வழிபடும் ஒழுங்கு முறையைச் செய்து காட்டுக.

### பாடச்சுருக்கம்

- ஆலயம் என்பது ஆன்மா லயப்படும் இடமாகும்.
- ஆலயத்துக்கு நாள்தோறும், விசேட தினங்களிலும் செல்லல் வேண்டும்.
- ஆலயத்துக்குச் செல்லும் முன் பின்பற்ற வேண்டிய ஒழுங்குகள் பல உள்ளன. (படிமுறை விளக்கம்)
- பூசைப் பொருட்கள், அவற்றைச் சேகரித்து எடுத்துச் செல்லும் முறை என்பன தரப்பட்டுள்ளன.
- ஆலயத்தினுள் பின்பற்றப்படும் வழிபாட்டு ஒழுங்கு முறைகள் பல உள்ளன.
- ஆலயத்தினுள் மற்றவர்களுக்கு இடையூறு செய்யாத வகையில் வழிபட வேண்டும்.
- ஆலயத்தில் செய்யக்கூடிய தொண்டுகள் பல உள்ளன.
- ஆலய வழிபாட்டினால் பல நன்மைகள் கிடைக்கும்.

# 13 சைவசமய குரவர் நால்வர்

சைவ சமய குரவர்கள் என அழைக்கப்படுபவர்கள், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். திருநாவுக்கரசு நாயனார். சுந்தரமூர்த்தி நாயனார். மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் நால்வருமாவர். சைவசமய குரவர் நால்வரும் சிவனைக் குறித்து அநேக பாடல்கள் பாடி, பல அற்புதங்களைச் செய்து, சைவசமயமே மெய்ச்சமயம் என்று நிலைநிறுத்தியவர்கள் ஆவர்.



சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர்

தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் இருந்த சிவத்தலங்களுக்கு, சமய குரவர் நால்வரும் அக்காலத்தே கால்நடையாக யாத்திரை செய்தனர்; அத்தலங்களின் மீது திருப்பாடல்களைப் பாடினர்; அற்புதங்கள் பலவற்றைச் செய்தனர். அதனால் சைவ-நெறி தழைத்தது. சைவத்தின் பெருமை நிலைநாட்டப்பட்டது. அத்தகைய பெருமை வாய்ந்தோர் பற்றி, நாம் கற்றல் அவசியமாகும். அவர்கள் செய்த பணியை முன்மாதிரியாகக் கொண்டு, இயன்றளவு சமய, சமூகப் பணிகளைச் செய்ய நாம் முன்வர வேண்டும்.

## (அ) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

சோல நாட்டின் சீர்காழி என்னும் பதியில் வாழ்ந்த சிவபாதவிருதயருக்கும், பகவதி அம்மையாருக்கும் மகனாக, திருஞானசம்பந்தர் பிறந்தார்.

சிவபாதவிருதயர் ஒருநாள் சீர்காழிப் பதியிலுள்ள தோணிபுரக் கோயிலுக்குச் சென்றார். குழந்தையும் தந்தையுடன் சென்றது. குழந்தையைத் திருக்கோயில் குளக்கரையில் இருந்திவிட்டு, தந்தை குளத்தில் நீராடினார். அவரைக் காணாது ஏங்கிய குழந்தை, 'அம்மே, அப்பா' என்று அழுத்து. அப்போது சிவபெருமான் உமாதேவியா-ரோடு அங்கே வந்தார். உமாதேவியார் தம் திருமுலைப்பாலைக் குழந்தைக்கு ஊட்டினார். அதனைப் பருகிய குழந்தை சிவஞானத்தையும், கலை ஞானத்தையும் பெற்றது.

நீராடி முடித்து விட்டு வந்த தந்தை, குழந்தையின் வாயிலே இருந்து வழிந்த பாலைக் கண்டார். அது பற்றி வினவினார். அப்போது குழந்தை கோயிலைச் சுட்டிக்காட்டி 'தோடுடைய செவியன்..........' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியது. மூன்று வயதில் தேவாரம் பாடிய அக்குழந்தை ஞானசம்பந்தர் என அழைக்கப்பட்டது.

ஞானசம்பந்தர் பல தேவாரங்களைப் பாடினார்; அற்புதங்களைச் செய்தார். சிவ-பெருமானிடம் பொற்றாளம், முத்துக்குடை, முத்துச் சின்னம், முத்துப்பந்தர் பெற்றார். படிக்காசு பெற்று, பஞ்சம் தீர்த்தார். திருமறைக்காடு என அழைக்கப்படும் வேதாரணியத்தில். வேதங்களினாலே பூட்டப்பட்டுத் திருநாவுக்கரசு நாயனாராற் திறக்கப்பட்ட திருக்கதவை அடைக்கச் செய்தார். பாண்டிய மன்னனின் நோயை நீக்கி, அவரைச் சைவனாக்கினார்.

ஆளுடைய பிள்ளையார், பாலறாவாயர், பரசமய கோளரி என்பன அவரது வேறு பெயர்களுட் சிலவாகும். அவர் பதினாறு ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்த்து, வைகாசி மூல நாளில் சோதியுட் கலந்தார்.

## (ஆ) திருநாவுக்கரசு நாயனார்

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் காலத்தைச் சேர்ந்தவர். கி.பி. 7ஆம் நூற்றான்டில் வாழ்ந்தவர். அவர் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வாழ்ந்த புகழனாருக்கும் மாதினியாருக்கும் மகனாகப் பிறந்தார். அவரது பிள்ளைத் திருநாமம் மருணீக்கியார் என்பதாகும். அவர் இளமைக் காலத்தில் பல துன்பங்களை அனுபவித்தார். சமண சமயத்தில் சேர்ந்து, அச்சமய நூல்களைக் கற்றுத் தேர்ந்து. தருமசேனர் என்னும் பெயருடன் சமண சமய குருவாகத் திகழ்ந்தார்.

தமக்கை திலகவதியார் தம்பியைச் சைவத்துக்கு மீட்டுத் தரும்படி இறைவனை வேண்டினார். சிவபெருமான், அவர் கனவில் தோன்றி, 'தம்பியை மீட்டுத் தருவோம்' என்றார். தருமசேனருக்குச் சூலைநோய் உண்டாகியது. அதனைச் சமணர்களால் குணப்படுத்த முடியவில்லை. அதனால், அவர் தமக்கையாரிடம் வந்தார். தமக்கையார் கொடுத்த திருநீற்றை உடலில் பூசினார். தமக்கையார் அவரை திருவதிகை வீரட்டானேச்சுர ஆலயத்துக்கு அழைத்துச் சென்றார். அவர் கோயிலை வலம் வந்து 'கூற்றாயினவாறு......' என்று தொடங்கும். பதிகத்தைப் பாட, சூலைநோய் நீங்கியது. அவ்வேளை 'நாவுக்கரசு' என்னும் பெயர் இறைவனால் அவருக்கு வழங்கப்பட்டது.

திருநாவுக்கரசர் இறையருள் பெற்றதை சமணர்கள் அறிந்தனர். பல்லவ மன்னன் மகேந்திர வர்மனின் துணையுடன் அவருக்குப் பல கொடுமைகளைச் செய்தனர். நாவுக்கரசர் இறைவன் மீது தேவாரம் பாடி, அக்கொடுமைகளிலிருந்து மீண்டார். பல்லவ மன்னனையும் சைவத்துக்கு மாறச் செயதார். பின்னர் நாவுக்கரசர், உழவாரம் கொண்டு ஆலயங்களில் புல், பூண்டுகளைச் செதுக்கி பணி செய்தார்.

நாவுக்கரசர் இறையரளால் பல அற்புதங்களைச் செய்தார். சமணர்களாலே ஏழு நாட்கள் சுண்ணாம்பு அறையில் அடைக்கப்பட்டிருந்தும். வேகாது பிழைத்தமை, சமணர்கள் கொடுத்த நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டும் சாகாது பிழைத்தமை, கொல்ல வந்த யானை அவரை வணங்கிச் சென்றமை, கல்லுடன் கட்டிக் கடலில் விட்டபோது, கல் தெப்பமாக மிதந்தமை, சம்பந்தருடன் சேர்ந்து படிக்காசு பெற்று, பஞ்சம் தீர்த்தமை, திருமறைக்காட்டுக் கோயில் கதவு திறக்கப்பாடியமை என்பன அவர் செய்த அற்புதங்களுட் சிலவாகும்.

நாவுக்கரசு, அப்பர், ஆளுடைய அரசு, உழவாரப் படையாளி என்பன அவருடைய வேறு பெயர்களாகும். திருநாவுக்கரசர், இவ்வுலகில் எண்பத்தொரு ஆண்டுகள் வாழ்ந்து சைவத்துக்குப் பணியாற்றிய அவர், சித்திரை மாதச் சதய நன்னாளில் முத்தி அடைந்தார்.

## (இ) சுந்தரமூர்த்தி நாயனார்

இவர் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் வாழ்ந்த சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் மகனாகப் பிறந்தவர். நம்பியாரூரர் என்பது அவரது பிள்ளைத் திருநாமம் ஆகும்.

நம்பியாரூரர், அந்நாட்டு அரசனாகிய நரசிங்கமுனையரினால் வளர்க்கப்பட்டார். அவர் வளர்ந்து, திருமணப் பருவத்தை அடைந்ததும். அவருக்கு புத்தூர் சடங்கவி சிவாசாரியார் என்பவரது மகளைத் திருமணம் பேசினர். திருமண வேளையில் இறைவன் கிழப்பிராமண வடிவில் வந்தார்; மணப்பந்தலில் வீற்றிருந்த சுந்தரருடன் வாதம் செய்தார். பின் திருவருட்துறையில் வழக்குத் தொடுத்து. சுந்தரரைத் தடுத்தாட் கொண்டார். அவ்வேளையில் சுந்தரர், கிழப்பிராமணராக வந்த சிவ பிரானைப் ‘பித்தன்’ என்று வன்சொற் கூறி இகழ்ந்தார். அதனால், சுந்தரர், வன்தொண்டர் என்னும் பெயர் பெற்றார். ‘‘பித்தா பிறை சூடி........’’ என்று தொடங்கும் முதற் பதிகத்தைப் பாடினார்.

சுந்தர் பல திருத்தலங்களுக்கும் சென்றார். அங்குள்ள இறைவனை வழிபட்டு, தேவாரம் பாடினார். பல அற்புதங்களைச் செய்தார். செங்கற்களைப் பொன்னாகப் பெற்றுக் கொண்டமை. ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்தில் எடுத்தமை, முதலை உண்ட பிள்ளையை மீட்டமை என்பன அவரது அற்புதங்களுள் சிலவாகும்.

சுந்தரர், வன்றொண்டர், ஆலாலசுந்தரர், தம்பிரான் தோழர் என்பன அவருடைய *மறு* பெயர்களாகும். சுந்தரர் பதினெட்டு ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்து. ஆடிமாதச் சோதி நன்னாளில் திருக்கைலையை அடைந்தார்.

## (ஈ) மாணிக்கவாசக சுவாமிகள்

இவர் பாண்டிய நாட்டிலே திருவாதவூரில் வாழ்ந்த சம்புபாதாசிரியருக்கும் சிவஞானவதியாருக்கும் மகனாகப் பிறந்தார். அவரது பிள்ளைத் திருநாமம் திருவாதவூரர் என்பதாகும். அவர் பாண்டிய மன்னனுடைய முதலமைச்சராகப் பணிபுரிந்தார். அரசனின் வேண்டுகோளுக்கு அமைய, குதிரை வாங்கச் சென்றபோது, திருப்பெருந்துறையில் பரமாச்சாரியராக வந்த இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர். குதிரை வாங்குவதற்கு வந்த நோக்கத்தை மறந்தமையால் அரசனால் தண்டனை பெற்றவர்.

இறைவன், திருவாதவூரரின் துன்பங்களை நீக்கினார்; திருவாதவூரர் பொருட்டு, நரியைப் பரியாக்கினார். வைகை நிதியைப் பெருக்கெடுக்கச் செய்தார். இறைவனின் கருணையை உணர்ந்த திருவாதவூரர், பதவியை விட்டு நீங்கி, மீண்டும் திருப்பெருந்துறையை அடைந்து. பரமாச்சாரியரிடம் உபதேசம் பெற்றார்.

திருவாதவூரர் பல திருத்தலங்களுக்கும் சென்று, திருவாசகம் பாடி வழிபட்டார். திருவாசகப் பாடலில் மகிழ்ந்த இறைவன், அவருக்கு மாணிக்கவாசகர் என்னும் திருநாமத்தைச் சூட்டினார்.

மாணிக்கவாசகர் பல அற்புதங்களைச் செய்தார். ஊமைப் பெண்ணைப் பேச வைத்தார். இறைவன் அடியவராக வந்து, அவருடைய திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் கேட்டு எழுதும் பேறு பெற்றார். ஈற்றில் எல்லோரும் காண கனகசபையுட் புகுந்து, இறைவனுடன் இரண்டறக் கலந்தார். முப்பத்திரண்டு ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்த இவர் இறைவனுடன் கலந்த தினம் ஆனி மகம் ஆகும்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்க.**

| நாயன்மார் பெயர் | தாய், தந்தை பெயர் | மறுபெயர் | செய்த அற்புதங்கள் |
|---|---|---|---|
| 1. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் | .................... | .................... | .................... |
| 2. திருநாவுக்கரசு நாயனார் | .................... | .................... | .................... |
| 3. சுந்தரமூர்த்தி நாயனார் | .................... | .................... | .................... |
| 4. மாணிக்கவாசக சுவாமிகள் | .................... | .................... | .................... |

## செயற்பாடுகள்

1. 'நாயன்மார் நால்வர்' என்ற பொருளில் 3 நிமிடம் உரை நிகழ்த்துக.
2. நால்வரும் செய்த அற்புதங்கள், தொண்டுகள் என்பவற்றை எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
3. ஆசிரியரின் உதவியுடன் நால்வரின் குருபூசைகளை பாடசாலையில் மேற்கொள்க.

### பாடச்சுருக்கம்

- நாயன்மார் நால்வரும் இறைவனின் அருளைப் பெற்றவர்கள்.
- சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர் தேவாரம் பாடியும் மாணிக்கவாசகர் திருவாசகம் பாடியும் இறைவனை வழிபட்டனர்.
- நால்வரும் பல அற்புதங்களைச் செய்தவர்கள்.
- நால்வரின் பெற்றோர், பிறந்த நாடு, ஊர், பிள்ளைத் திருநாமம், மறுபெயர், செய்த அற்புதங்கள் முதலான விபரங்கள் உள்ளடக்கப்பட்டுள்ளன.

# 14 ஞானப்பிரகாச முனிவர்

ஞானப்பிரகாசர் யாழ்ப்பாணத்திலுள்ள திருநெல்வேலி என்னும் இடத்தில் கி.பி. 1625 ஆம் ஆண்டில் பிறந்தார். அவருடைய தந்தையார் பெயர் காராளபிள்ளை என்பதாகும். அவர் அதிகாரமும், கல்வியும், பெருஞ் செல்வமும் கொண்ட குடும்பத்தைச் சேர்ந்தவர். ஞானப்பிரகாசர் வாழ்ந்த காலத்தில் யாழ்ப்பாண இராச்சியமானது போர்த்துக்கேயரின் ஆட்சியின் கீழ் அடிமைப்பட்டுக் கிடந்தது.

போர்த்துக்கேயர் ஆட்சியில், ஒவ்வொரு வீட்டினரும் ஓர் ஒழுங்குமுறைப்படி ஒவ்வொரு பசுவை, பறங்கியரின் உணவுக்காகக் கொடுத்தல் வேண்டும் என்ற சட்டத்தை விதித்திருந்தனர். அப்போது ஞானப்பிரகாசர் இளமைப் பருவத்தை அடைந்திருந்தார். சைவ மரபில் வளர்ந்த அவர் உயிர்களிடத்தில் மிகுந்த இரக்கம் கொண்டவராக விளங்கினார். பசு மாட்டைக் கொலை செய்யும் கொடுந் தொழிலுக்கு உதவியாக இருக்க, அவரது அருள் நிறைந்த உள்ளம் ஒப்பவில்லை. எனவே, அவரால் போர்த்துக்கேயரின் சட்டத்திற்கு அடிபணிய முடியவில்லை. தாம் பசு வழங்கும் முறை வந்ததும், இரவோடிரவாக யாழ்ப்பாணத்தை விட்டு, தமிழகம் சென்றார்.

ஞானப்பிரகாசர் தமிழ் நாட்டைத் தாயகமாகக் கொண்டு வாழ்ந்தார். வேதாரணியம் என்னுமிடத்தில் தங்கியிருந்து திருத்தொண்டுகள் புரிந்து வந்தார். பின்னர் அங்கிருந்து திருப்புகலூர் சென்று, அண்ணாசாமி ஆசாரியரிடத்தில் சிவதீட்சை பெற்ற பின்னர், சிதம்பரம் சென்றார். நடராஜப் பெருமானிடம் கொண்ட பக்தியால் சிதம்பரத்தை வசிப்பிடமாகக் கொண்டார்.

ஞானப்பிரகாசர் ஒருமுறை தமிழ்நாட்டின் வடக்கே பயணம் செய்து, வங்காளம் என்னும் நாட்டைச் சென்றடைந்தார். அங்கிருந்த காலத்தில் பிராமணத் துறவி ஒருவரிடம் வடமொழியிலுள்ள தருக்கம், மீமாம்சை, வியாகரணம் முதலியவற்றைக் கற்றார். குரு உபதேசம் பெற்றார். குருவின் கட்டளைப்படி திருவண்ணாமலை ஆதீனத்தை அடைந்து விசேட தீட்சை பெற்று, துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். துறவியான காரணத்தால், முனிவர் என்ற சிறப்புப் பெயரால் போற்றப்பட்டார்.

ஞானப்பிரகாச முனிவர், திருவண்ணாமலை ஆதீனத்தில் இருந்தபொழுது, சைவம், சைவசித்தாந்தம், தமிழ்மொழி, வடமொழி என்பவற்றில் நல்ல புலமையும், சிறந்த தேர்ச்சியும் பெற்றார். அதனால், தமிழ்மொழியிலும், வடமொழியிலும் சைவசித்தாந்த நூல்களை இயற்றும் ஆற்றலைப் பெற்றார்.

சிறிது காலத்தின் பின், ஞானப்பிரகாச முனிவர் திருவண்ணாமலையிலிருந்து சிதம்பரம் திரும்பினார். சிதம்பரத்தில் ஞானப்பிரகாசம் என்னும் குளத்தையும், அதனை அடுத்து மடம் ஒன்றையும் தாபித்தார். அவற்றின் அருகில் ஆச்சிரமம் ஒன்றையும் அமைத்தார். தமது வாழ்வின் இறுதிக் காலத்தில் இறை பணிகளிலும், சமய நூல்களுக்கு உரை எழுதுவதிலும் ஈடுபட்டார். அவர் சிவஞானசித்தியார் சுபக்கத்திற்குத் தமிழில் எழுதிய உரை சிறப்பு வாய்ந்ததொன்றாகும். ஞானப்பிரகாச முனிவர் வடமொழியில் சித்தாந்த சிகாமணி, பிரமாண தீபிகை, பிரசாத தீபிகை முதலான நூல்களையும் பௌட்கராகம விருத்தி, சிவஞானபோத விருத்தி முதலிய உரை நூல்களையும் எழுதியுள்ளார்.

ஈழத்திலிருந்து சென்று, தமிழகத்தில் சைவ சித்தாந்தப் பணிபுரிந்த ஞானப்பிரகாச முனிவர் கி.பி. 1658 ஆண்டு பங்குனி மாதம் பூச நட்சத்திரத்தில் இறைபதம் அடைந்தார். முப்பத்து மூன்று ஆண்டுகள் உலகிலே வாழ்ந்த அவர், மிகச் சிறிய வயதிலே பெரும் சித்தாந்த சிந்தனையாளர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார்.

தோன்றிற் புகழொடு தோன்றுக

## பயிற்சிகள்

1. **பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**
    1. ஞானப்பிரகாச முனிவரிடம் காணப்பட்ட நற்பண்புகள் இரண்டு தருக.
    2. அவர் யாழ்ப்பாணத்தை விட்டு, தமிழகம் சென்றதற்கான காரணம் யாது.?
    3. ஞானப்பிரகாச முனிவர் சிதம்பரத்தில் செய்த பணிகள் இரண்டு தருக.
    4. ஞானப்பிரகாச முனிவர் சைவத்துக்கு ஆற்றிய பணிகள் இரண்டு தருக.

## செயற்பாடு

1. ஞானப்பிரகாச முனிவர் வரலாற்றைப் படித்த பின்னர், நீங்கள் கற்றுக் கொண்ட முக்கிய விடயங்களை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- ஞானப்பிரகாச முனிவர் யாழ்ப்பாணம் திருநெல்வேலியைச் சேர்ந்தவர்.
- உயிர்களிடம் கொண்ட இரக்கத்தால், பசுவதைக்கு அஞ்சி, தமிழகம் சென்றார்
- அவர் சைவம், சைவசித்தாந்தம், தமிழ்மொழி, வட மொழி என்பவற்றில் புலமை பெற்றிருந்தார்.
- ஞானப்பிரகாச முனிவர் சிதம்பரத்தில் குளம், மடம், ஆச்சிரமம் என்பவற்றைத் தாபித்துப் பணி புரிந்தார்.
- சமய நூல்களுக்கு உரை எழுதினார்.
- ஞானப்பிரகாச முனிவர் சைவசித்தாந்த நூல்களையும் எழுதினார்.

# 15 ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்



நாவலர் பெருமான் இலங்கையிலும் தென்னிந்தியாவிலும் சைவ நெறியையும், தமிழ் மொழியையும் வளர்ப்பதற்குப் பெரும் பணிபுரிந்தவர் ஆவார். அவரின் கல்விப் புலமை, நாவன்மை, சைவத் தமிழ்ப் பணி என்பவற்றிற்காகத் திருவாவடுதுறை ஆதீனத்தால் நாவலர் என்ற பட்டம் சூட்டிக் கௌரவிக்கப்பட்டவர். அவ்வாறே, சைவம் காத்த அவர் சைவ மக்களால் ஐந்தாம் குரவர் எனவும் போற்றப்படுகின்றார்.

நாவலர் பெருமான் யாழ்ப்பாணத்து நல்லூரிலே கந்தப்பிள்ளை, சிவகாமியம்மையார் என்போருக்கு மகனாக 1822 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 18 ஆம் திகதி பிறந்தார். அவருக்கு ஆறுமுகம் எனப் பெற்றோர் பெயரிட்டு வளர்த்தனர்.

நாவலர் நல்லூர் சுப்பிரமணிய உபாத்தியாயர், நல்லூர் வேலாயுத முதலியார், இருபாலை சேனாதிராய முதலியார், நல்லூர் ம. சரவணமுத்துப் புலவர் என்போரிடம் தமிழ் இலக்கிய, இலக்கணங்களைக் கற்றார். அத்துடன் வடமொழியையும் கற்றுத் தேர்ந்தார். வெஸ்லியன் மெதடிஸ்த மிசனைச் சேர்ந்த யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் ஆங்கிலம் கற்றார். அக்கல்லூரியில் ஆசிரியராகவும் சேவை செய்தார்.

நாவலர் பெருமான் சைவம், தமிழ் ஆகிய இரண்டின் வளர்ச்சிக்காகவும் தம் வாழ்வை அர்ப்பணம் செய்தவர். அவர் சிவபக்தி உடையவர்; சிவனடியார் மீது பக்தி கொண்டவர்; தமிழ்ப் புலமை மிக்கவர்; சிறந்த கல்விமான்; பிரசங்கத்தில் வல்லவர்; வாக்குச் சாமர்த்தியம் உள்ளவர்; நல்லொழுக்கம் உடையவர். அப்பண்புகள் அவரிடம் இளமைக்காலந் தொட்டுக் காணப்பட்டன. அவை, அவர் சமயப் பணியைத் திறம்படச் செய்ய உதவியாக அமைந்தன.

நாவலர் சைவ சமயத்தை வளர்க்க, பல வழிமுறைகளைக் கையாண்டார். அவற்றில் முதல்வழி சைவப் பிரசங்கமாகும். அவரது பிரசங்கத்தின் பொருளாக சிவசின்னங்கள், திருமுறைகள் முதலானவை அமைந்திருந்தன. அதன் மூலம் மக்களிடையே சமய விழிப்புணர்ச்சியை ஊட்டினார்; புறச்சமயம் போகாமல் மக்களைச் சைவத்தில் நிலைத்திருக்கச் செய்தார். சைவ மக்கள் திருநீறு முதலிய சிவசின்னங்களை அணியவும் சைவத் திருமுறைகளைப் பாடவும் விரதங்களை அனுட்டிக்கவும் ஆலய தரிசனம் செய்யவும் சமய மரபுகளைப் பேணவும் அவர் தூண்டுகோலாக விளங்கினார்.

தமிழகத்திலும் இலங்கையிலும் சைவ சமயத்தையும் தமிழையும் வளர்த்த ஆறுமுக நாவலர் எல்லோராலும் நன்கு போற்றப்பட்டார். அவர், சிதம்பரத்திலும், யாழ்ப்பாணத்தில் பல இடங்களிலும் சைவத் தமிழ்ப் பாடசாலைகளை நிறுவினார். அச்சு இயந்திரசாலைகள் அமைத்து, பல நூல்களைத் தமிழில் வெளியிட்டார். பழைய நூல்களைப் புதுப்பித்தும், புதிய நூல்களை எழுதியும் சைவத்திற்கும் தமிழுக்கும் பல தொண்டுகள் செய்தார். அவர் கந்தபுராண வசனம், பெரியபுராண வசனம், திருவிளையாடற் புராண வசனம் முதலான வசன நூல்களை எழுதினார். அவை எளிமை மிக்கவை. அதனால், வசனநடைக்கு ஆறுமுகநாவலரே தந்தை என்பர்.

சைவத்தையும் தமிழையும் நன்கு பாதுகாத்த நாவலர், 1879 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 21 ஆந் திகதி இறையடி சேர்ந்தார். அவரது குருபூசைத் தினம் கார்த்திகை மாதம் மக நட்சத்திரமாகும். நாவலரது பணிகளைப் பெரியோர் பின்வருமாறு போற்றுவர்.

நல்லைநக ராறுமுக நாவலர்பி றந்திலரேற்
சொல்லுதமி ழெங்கே சுருதியெங்கே - எல்லவரும்
ஏத்துபுரா ணாகமங்க ளெங்கேபிர சங்கமெங்கே
ஆத்தனறி வெங்கே யறை.

- சி. வை. தாமோதரம்பிள்ளை

## பயிற்சிகள்

01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. ஆறுமுகநாவலர் சைவப்பணி, தமிழ்ப்பணி புரிந்த இடங்களைக் குறிப்பிடுக.
2. அவருக்கு 'நாவலர்' என்ற பட்டத்தை வழங்கிய நிறுவனம் எது?
3. நாவலரின் சைவப்பிரசங்கத்தால் ஏற்பட்ட நன்மைகள் இரண்டினை குறிப்பிடுக?

## செயற்பாடு

1. ஆறுமுகநாவலரின் சமயப்பணி, சமூகப் பணி தொடர்பான தகவல்களைச் சேகரித்து, எழுதுக. அதனைவகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- அன்னியர் ஆதிக்கத்திலிருந்து சைவத்தை மீட்டுத்தந்தவர் ஆறுமுகநாவலர்.
- நாவலர் சைவத் தமிழ்ப் பணிகளுக்காகத் தனது வாழ்வைத் தியாகம் செய்தவர்.
- நாவலர் சைவத்தைப் பேணிக்காக்க பல வழிமுறைகளைக் கையாண்டுள்ளார்.

# 16 முழுப்பெயர்

சைவ சமயம் என்றும் உள்ள பொருள்களாக பதி, பசு, பாசம் என்ற மூன்றையும் குறிப்பிடுகின்றது. அவை தொடக்கமோ முடிவோ அற்றவை; என்றும் உள்ளவை அநாதி ஆனவை.

பதி என்பது கடவுள், பசு என்பது உயிர், பாசம் என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் குறிக்கும். உலகத்தில் உள்ள எல்லாவற்றையும் பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களுள் அடக்கலாம்.

### பதி

பதி, கடவுள், ஆண்டவன் என்பன ஒரு பொருட் சொற்கள். பதி பரிபூரணமானவர். அவர் என்றும் உள்ளவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் வல்லவர்; எல்லாம் அறிபவர்; நிரம்பிய கருணையாளர். அவருக்குத் தளைகளே இல்லை. உலகம், உயிர்கள் ஆகியவற்றையெல்லாம் கடந்து உள் நிற்பதால் பதியைக் கடவுள் என்றும் உலகினை ஆட்சி புரிவதனால் ஆண்டவன் என்றும் அழைப்பர். பதி உயிர்கள் தோறும் ஒன்றாய் உடனாய் வேறாய் உள்ளார். எல்லா உயிர்களிலும் அவர் உறைந்துள்ளார். ஆதலால், நாம் எல்லா உயிர்களுக்கும் நல்லவற்றைச் செய்ய வேண்டும்.

### பசு

உயிர்கள் எண்ணற்றவை. தாம் செய்த செயல்களின் பலனை அனுபவிப்பவை. அவை பாசத்தினால் கட்டுண்டவை. உயிர்கள் தமது தன்மையை உணர்வதில்லை. அவை தமது தன்மையை அறிந்து, பதியை அடைதலே முத்தியாகும். நாம் கடவுளுக்கும் சிவனடியார்களுக்கும் தொண்டு செய்தல் வேண்டும். அது உயிர்களுக்கு பிறப்பு இறப்பை இல்லாமற் செய்து, முத்திக்கு வழியேற்படுத்தும்.

### பாசம்

பாசம் உயிர்களைப் பற்றி நிற்கும். பாசம் என்பது, பந்தித்து நிற்பது எனப் பொருள் படும். இது உயிர்களின் அறிவை மயக்கி, துன்பத்தை இன்பமாகக் காட்டி, அவற்றை அனுபவிக்கச் செய்து, பிறவிகளை வழங்குகின்றது. உயிர்கள் கடவுளை அறியாதபடி பாசம் தடை செய்கின்றது.

பிறர் அறிவிக்காமலே தானே அறியும் முற்றறிவுள்ள பொருள் பதி. அறிவித்தால் அறிந்தும், அறிவிக்காவிட்டால் அறியாமலும் உள்ள சிற்றறிவுள்ள பொருள் பசு. அறிவித்தாலும் அறியமுடியாத பொருள் பாசம். இவ்விதமாக பதி, பசு, பாசம் என்னும் மூன்றையும் அறிவின் அடிப்படையில் முற்றறிவு உள்ள பொருள், சிற்றறிவு உள்ள பொருள், அறிவற்ற பொருள் என மூன்றாக வகுக்கலாம்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.ஷ**

1. முப்பொருள்களும் யாவை?
2. மும்மலங்களும் எவை?
3. பதி வேறு எவ்வாறு அழைக்கப்படுவார்?
4. பதியின் சிறப்பியல்புகள் மூன்றினைக் குறிப்பிடுக.

### பாடச்சுருக்கம்

- சைவ சமயம் பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களையும் உள்ள பொருள் என்று கூறுகின்றது.
- ஆணவம், கன்மம், மாயை என்பன மூவகை மலங்களாகும்.
- பதி பல்வேறு சிறப்பியல்புகளைக் கொண்டது.

## செயற்பாடு

**02. ''முப்பொருள்'' என்ற தலைப்பில் வகுப்பறையில் 3 நிமிடம் உரை நிகழ்த்துக.**

# 17 ஈழத்துச் சைவமரபு

திருமூலராற், சிவபூமி என்று சிறப்பிக்கப் பெற்றது எமது நாடு. மிகத் தொன்மையான காலத்திலே எமது நாட்டில், ஐந்து ஈஸ்வரங்கள் இருந்ததாக வரலாறு குறிப்பிடுகின்றது. இந்தப் புராதன சிவாலயங்களுள் வடக்கே நகுலேஸ்வரமும் கிழக்கே திருக்கோணேச்சரமும் மேற்கே முன்னேஸ்வரமும் வடமேற்கே திருக்கேதீஸ்வரமும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. எமது நாட்டின் தெற்கே தெய்வந்துறையில் சந்திரசேகர ஈஸ்வரம் என்ற சிவாலயம் இருந்ததாக அறிகின்றோம்.



திருக்கேதீஸ்வரம்



கொக்கட்டிச்சோலைத் தான் தோன்றீஸ்வரம்

இவ்வாலயங்களில், திருக்கேதீஸ்வரம் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய இருவராலும், திருக் கோணேச்சரம் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாராலும் தேவாரம் பாடப்பெற்ற சிறப்புக்குரியன. இந்த ஆலயங்களைத் தவிர, கொக்கட்டிச்சோலைத் தான்தோன்றீஸ்வரம், ஒட்டுசுட்டான் தான்தோன்றீஸ்வரம் என்பனவும் எமது நாட்டிலுள்ள முக்கியமான சிவாலயங்களாகும்.

சிவநெறி தழைத்தோங்கும் எமது நாட்டில் அம்மன் ஆலயங்கள் பல உள்ளன. அம்மன், பராசக்தி, பூரணி எனப் பல நாமங்களால் அடியார்களால் போற்றப்படுகின்றாள். எமது நாட்டில் உள்ள அம்மன் ஆலயங்களில் நயினை நாகபூசணியம்மன் ஆலயம், தெல்லிப்பழை துர்க்கையம்மன் ஆலயம், மாத்தளை முத்துமாரியம்மன் ஆலயம், திருகோணமலை பத்திரகாளி அம்மன் ஆலயம் முதலானவை புகழ் பெற்ற அம்மன் ஆலயங்களாக விளங்குகின்றன. இது போலவே, சிறப்புடைய விநாயகர் ஆலயங்களும் இலங்கை முழுவதும் அமைந்துள்ளன.



நயினை நாகபூசணியம்மன் ஆலயம்



மண்டூர் முருகன் ஆலயம்



நல்லூர் கந்தசாமி ஆலயம்

முருக வழிபாடு பழந்தமிழர் வழிபாடாகும். இலங்கையில் கதிர்காமம், மண்டூர், செல்வச்சந்நிதி, நல்லூர், மாவிட்டபுரம், வெருகல், திருக்கோயில், உகந்தைமலை, போரதீவு, சித்தாண்டி, தாந்தாமலை என்னும் இடங்களில் புகழ் பெற்ற முருகன் ஆலயங்கள் அமைந்துள்ளன. பேராதனைக் குறிஞ்சிக் குமரன் ஆலயமும் இவற்றில் அடங்கும்.

யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே
மாதொரு பாகனார் தாம் வருவார்

என்ற சிவஞான சித்தியாரின் கூற்றினை எமது நாட்டுச் சமய மரபில் காண முடியும். சிவன் ஆலயம், அம்மன் ஆலயம், விநாயகர் ஆலயம், முருகன் ஆலயம் என தனித்தனி ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ள போதும், அவை அனைத்தையும் சிவ பரம்பொருளாகவே பார்க்கும் சிவநெறி எமது நாட்டிலே ஆழமாக வேரூன்றி உள்ளது. இது ஈழத்துச் சைவமரபின் தனித்துவமாகும்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இலங்கையில் தான்தோன்றீஸ்வரர் ஆலயங்கள் எங்கெங்கு அமைந்துள்ளன?
2. சிவபூமி என்று இலங்கையைச் சிறப்பித்துக் கூறியவர் யார்?
3. இலங்கையிலுள்ள சிவாலயங்கள் மூன்றின் பெயர்களை எழுதுக.
4. இலங்கையிலுள்ள அம்மன் ஆலயங்கள் மூன்றின் பெயர்களை எழுதுக.
5. இலங்கையிலுள்ள முருகன் ஆலயங்கள் மூன்றின் பெயர்களை எழுதுக.

**02. பின்வரும் ஆலயங்கள் அமைந்துள்ள இடங்களைக் கண்டறிந்து, அவற்றை எழுதுக.**

1. நகுலேஸ்வரம் - ............................................
2. திருக்கோணேச்சரம் - ............................................
3. முன்னேஸ்வரம் - ............................................
4. திருக்கேதீஸ்வரம் - ............................................
5. குறிஞ்சிக் குமரன் ஆலயம் - ............................................

## பாடச்சுருக்கம்

- இலங்கையைச் 'சிவபூமி' என திருமூலர் குறிப்பிட்டுள்ளார்.
- மிகத் தொன்மையான காலத்திலே எமது நாட்டில், ஐந்து ஈஸ்வரங்கள் இருந்தன.
- இலங்கையில் சிவாலயங்களுடன் அம்மன் ஆலயம், விநாயகர் ஆலயம், முருகன் ஆலயம் என்பனவும் உள்ளன.
- இலங்கையிலுள்ள சைவ சமயத்தவர், சிவனை மட்டுமன்றி அம்மன், விநாயகர், முருகன், வைரவர், விஷ்ணு முதலான தெய்வங்களையும் வணங்குவர்.

## செயற்பாடு

உமது பிரதேசத்திலுள்ள ஆலயம் ஒன்றுக்குச் சென்று அங்கு நடைபெறும் கிரியைகளை அவதானித்து அவற்றை அட்டவணைப் படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# 18 விநாயகர் ஆலயங்கள்

திருவாக்கும் செய்கருமங் கைக்கூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தம்கை.

எங்கள் நாட்டிலே விநாயகர் ஆலயம் இல்லாத ஊரே இல்லை என்று கூறலாம். விநாயகப் பெருமானின் வழிபாடு புராதன காலத்தில் இலங்கையிலே நிலைபெற்றிருந்தது என்பதற்கு வன்னிப்பகுதி, அநுராதபுரம், பொலனறுவை, தெய்வந்துறை ஆகிய இடங்களில் காணப்படும், விநாயகப் பெருமானின் புராதன ஆலயங்களின் அழிபாடுகள் சான்றாகவுள்ளது.

இன்றும் சிறப்போடும் பொலிவோடும் விளங்கும் விநாயகர் ஆலயங்கள் பல நம் நாட்டில் உள்ளன. இலங்கையின் வட பகுதியில் நல்லூரில் உள்ள வெயிலுகந்த பிள்ளையார் ஆலயம் உள்ளது. இது பரராசசேகர னாற் கட்டப்பட்டதாகும். உரும்பிராயில் உள்ள கருணாகரப் பிள்ளையார் ஆலயம் கருணாகரத் தொண்டமானால் கட்டப்பட்டது. அரசகேசரியினால் நீர்வேலியில் அரசகேசரிப் பிள்ளையார் ஆலயம் கட்டப்பட்டது. இவற்றைத் தவிர, இணுவில் பரராச சேகரப் பிள்ளையார், செகராசசேகரப் பிள்ளையார் ஆலயங்களும் சுழிபுரத்தில் உள்ள பறாளை விநாயகர் ஆலயம், மருதடி விநாயகர் ஆலயம், முறிகண்டிப் பிள்ளையார் ஆலயம் என்பனவும் இலங்கையின் வட பகுதியில் உள்ள விநாயகர் ஆலயங்களில் குறிப்பிடத்தக்கவையாகும்.



*சுழிபுரம் பறாளை விநாயகர் ஆலயம்*

இலங்கையின் கிழக்குப் பகுதியில் உள்ள விநாயகர் ஆலயங்களில், அமிர்தகழி மாமாங்கப் பிள்ளையார் ஆலயம் பழமையும் பெருமையும் வாய்ந்தது. மூர்த்தி, தலம், தீர்த்தச் சிறப்புகள் உடையது. வடக்கே கீரிமலை போன்று, கிழக்கே ஆடி அமாவாசை அன்று பிதிர்க்கடன் தீர்க்கும் புண்ணிய தலமாகவும் இது விளங்குகின்றது.

மாருதப்புரவீகவல்லியின் மகனான பாலசிங்க மன்னனின் சிந்து (கடல்) யாத்திரையின் போது கிடைத்த சிந்தாத்திரைப் பிள்ளையார் ஆலயம் வீரமுனையில் உள்ளது. களுதேவாலயக் கல்வெட்டுக் குறிப்பிடும் களுதாவளை-யிலுள்ள களுதாவளைப் பிள்ளையார் ஆலயம், செங்கலடிப் பிரதேசத்தில் உள்ள காளிகாமடு கற்பக விநாயகர் ஆலயம், கல்லடியில் உள்ள பிள்ளையார்



*வீரமுனை சிந்தாத்திரைப் பிள்ளையார் ஆலயம்*

ஆலயம், ஆரையம்பதியில் உள்ள திருநீலகண்டப் பிள்ளையார் ஆலயம், சங்கமன்கண்டிப் பிள்ளையார் ஆலயம், மட்டக்களப்பு புளியநகர் ஆனைப்பந்தி ஸ்ரீ சித்தி விக்னேஸ்வரர் ஆலயம், என்பனவும் திருகோணமலை இரட்ணசிங்கப் பிள்ளையார் ஆலயம் திருகோணமலை ஆலையடிப் பிள்ளையார் ஆலயம், அன்புவெளிபுரம் தில்லையம்பலப் பிள்ளையார் ஆலயம் என்பனவும் இலங்கையின் கிழக்குப் பகுதியில் உள்ள விநாயகர் ஆலயங்களில் குறிப்பிடத்தக்கவையாகும்.

மத்திய மலைநாட்டின் தலைநகரான கண்டியில் கட்டுக்கலைப் பிள்ளையார் ஆலயம் அமைந்துள்ளது. அத்துடன் ஹற்றன் மாணிக்கப் பிள்ளையார் ஆலயம், கதிர்காமத்திலும் செல்லக் கதிர்காமத்திலும் உள்ள மாணிக்கப் பிள்ளையார் ஆலயங்கள் என்பனவும் சிறப்பு வாய்ந்த விநாயகர் ஆலயங்களாகும். இனிவரும் வகுப்புகளில் விநாயகர் ஆலயங்கள் பற்றி விபரமாக நீங்கள் அறிந்து கொள்ளுவீர்கள்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. விநாயகப் பெருமானின் புராதன ஆலயங்கள் காணப்பட்ட இடங்களைக் குறிப்பிடுக.
2. இலங்கையின் வட பகுதியில் உள்ள விநாயகர் ஆலயங்கள் நான்கு தருக.
3. இலங்கையின் கிழக்குப் பகுதியில் உள்ள விநாயகர் ஆலயங்களைக் குறிப்பிடுக.
4. உங்கள் பகுதியில் உள்ள விநாயகர் ஆலயங்களின் பெயர்களைத் தருக.

02. பின்வரும் ஆலயங்களுடன் தொடர்புடையவர்களின் பெயர்களை இணைக்குக.

| | | | |
|---|---|---|---|
| 1. | வீரமுனை சிந்தாத்திரைப் பிள்ளையார் ஆலயம் | (அ) | அரசகேசரி |
| 2. | நல்லூர் வெயிலுகந்த பிள்ளையார் ஆலயம் | (ஆ) | கருணாகரத் தொண்டமான் |
| 3. | உரும்பிராய் கருணாகரப் பிள்ளையார் ஆலயம் | (இ) | பாலசிங்க மன்னன் |
| 4. | நீர்வேலி அரசகேசரிப் பிள்ளையார் ஆலயம் | (ஈ) | பரராசசேகரன் |

## செயற்பாடு

''ஈழத்து விநாயகர் ஆலயம்'' என்ற தலைப்பில் 3 நிமிடம் உரை நிகழ்த்துக.

### பாடச்சுருக்கம்

- விநாயகப் பெருமானின் வழிபாடு புராதன காலத்தில் இலங்கையிலே நிலைபெற்றிருந்தது.
- இலங்கையின் வடக்கு, கிழக்கு, தெற்கு, மத்திய பகுதிகளிலும், ஏனைய பகுதிகளிலும் விநாயகர் ஆலயங்கள் உள்ளன.

# 19 திருக்கோணேச்சரம்

இலங்கையின் கிழக்குத் திசையில் அமைந்துள்ள எழில் நிறைந்த நகரம் திருகோணமலையாகும். அங்குள்ள சுவாமி மலை எனப்படும் உயர்ந்த மலைப்பகுதியில் திருக்கோணேச்சர ஆலயம் அமைந்துள்ளது. இலங்கையில் உள்ள தொன்மை வாய்ந்த சிவ ஆலயங்களுள் இந்த ஆலயமும் ஒன்றாகும்.

திருக்கோணேச்சர ஆலயம் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றால் சிறப்பு மிகுந்தது. இத்தலத்தில், இறைவன் கோணேச்சரர், இறைவி மாதுமையாளுடன் வீற்றிருந்து அருள் புரிகின்றார். இத்தலத்தின் தீர்த்தம் **பாவநாசம்** என்பதாகும். தலவிருட்சமாக **கல்லாலமரம்** விளங்குகின்றது.

இலங்கையில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் திருக்கோணேச்சரமும் ஒன்றாகும். இத்தலம் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் தேவாரப் பதிகம் பாடப்பெற்ற சிறப்பினை உடையது. அவ்வாறே, அருணகிரிநாதரும் இத்தலத்தின் மீது திருப்புகழ் பாடியுள்ளார்.

இந்த ஆலயத்தின் வரலாற்றைப் புராண, இதிகாசக் கதைகள் ஊடாக அறியலாம். முன்னொரு காலத்தில் இலங்கையை ஆண்ட சிவபக்தனான இராவணன் என்னும் மன்னனது இஷ்ட தெய்வமாக திருக்கோணேச்சரர் விளங்கினார் என்றும் அந்த மன்னன் தினமும் இவ்வாலயத்திற்கு வந்து பூசித்துச் சென்றான் என்றும் கர்ணபரம்பரைக் கதைகள் கூறுகின்றன.



திருக்கோணேச்சர ஆலயம் மனுச்சோழ மன்னனால் கட்டுவிக்கப்பட்டதென்றும், அவன் மகன் குளக்கோட்ட மன்னனால் மிகுதித் திருப்பணி வேலைகள் செய்யப்பட்டன என்றும் வரலாறுகளால் அறியக்கூடியதாக உள்ளது. குளக்கோட்ட மன்னன் ஆலயத்திற்கென காணிகளை வழங்கியதுடன் ஆலயத் தொண்டிற்காகப் பல ஊழியர்களையும் நியமித்தான் என இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகள் குறிப்படுகின்றன.

பின்னர், இவ்வாலயம் இலங்கையை ஆட்சி செய்த போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் ஆகியோரது காலங்களில் பெரும் அழிவுக்குள்ளாகியது. இதனால், கோணேச்சரப் பெருமானின் அடியார்கள் விக்கிரகங்களையும் பிற பொருட்களையும் நிலத்தின் கீழ் மறைத்து வைத்து மனத்தாலே வழிபாடு செய்தனர். 1950 ஆம் ஆண்டிலே பல விக்கிரகங்கள் கண்டெடுக்கப்பட்டன. அத்துடன், சைவ அடியார்களின் முயற்சியால் மீண்டும் புதிய கோயில் அமைக்கப்பட்டது. 1963 ஆம் ஆண்டில் அவ்விக்கிரகங்கள் பிரதிட்டை செய்யப்பட்டு, மகாகும்பாபிஷேகமும் இடம்பெற்றது.

இந்த ஆலயத்தில் ஆகம முறைப்படி பூசைகள் இடம்பெறுகின்றன. மகோற்சவம் பங்குனி உத்தரத்தில் கொடியேற்றத்துடன் ஆரம்பித்து, 18 நாட்களுக்கு நடைபெறுகின்றது. இந்த ஆலயத்தில் சிவராத்திரி தினம் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகின்றது.

தாயினும் நல்ல தலைவரென் றடியார்
தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினும் மனத்தும் மருவிநின் றகலா
மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பா னீக்கி
நுழைதரு நூலினர் ஞாலங்
கோயிலும் சுனையுங் கடலுடன் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. திருக்கோணேச்சர ஆலயம் எங்கே அமைந்துள்ளது?
2. திருக்கோணேச்சர ஆலயத்தின் மீது தேவாரம் பாடிய நாயனார் யார்?
3. இவ்வாலயத்துக்குத் திருப்பணி செய்த மன்னர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிடுக.
4. திருக்கோணேச்சர ஆலய மகோற்சவம் எப்போது நடைபெறும்?

**02. கீறிட்ட இடங்களை நிரப்புக.**

1. திருக்கோணேச்சர ஆலயத்தின் இறைவன் .................................. இறைவி .............................. ஆவார்.
2. பாபநாசம் என்பது திருக்கோணேச்சர ஆலயத்தின் .............................. ஆகும்.
3. திருக்கோணேச்சர ஆலயத்தின் தலவிருட்சம் .............................. ஆகும்.
4. திருக்கோணேச்சர ஆலயத்தின் மீது .............................. திருப்புகழ் பாடியுள்ளார்.

## செயற்பாடு

1. திருக்கோணேச்சர ஆலயத்தின் மீது பாடப்பட்டுள்ள வேறு தேவாரம் ஒன்றை மனனம் செய்து அதனை வகுப்பறையில் ஓதிக்காட்டுக.

### பாடச்சுருக்கம்

- திருக்கோணேச்சர ஆலயம் மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்புமிக்கது.
- இத்தலம் புராண, இதிகாச கால பழமை வாய்ந்தது. இது தேவாரம், திருப்புகழ் பாடப்பெற்ற தலமாகும்.
- இவ்வாலய மகோற்சவம் பங்குனி உத்தரத்தில் கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி பதினெட்டு நாட்களுக்கு நடைபெறும்.

# 20 கதிர்காமம்

எமது நாட்டிலே முருகப் பெருமான் கோயில் கொண்டு அருள் புரியும் ஆலயங்கள் பல உள்ளன. அவற்றுள் கதிர்காமம் மிகப் பிரசித்தி பெற்ற யாத்திரைத் தலமாகும்.



கதிர்காமம் ஈழ நாட்டின் தென்கிழக்கில் உள்ளது. ஆலயத்தின் அருகில் மாணிக்க கங்கை என்னும் நதி ஓடுகிறது. அது இத்தலத்துக்குரிய தீர்த்தமாகும். கதிர் என்பது ஒளி காமம் என்பது அன்பு. எனவே, தெய்வீக ஒளியும் முருகனின் அன்பும் நிறைந்த தலம் கதிர்காமம் ஆகும். கதிர்காமம் என்பதற்குத் தினை என்ற தானியம் நிறைந்த கிராமம் என்றும் பொருள் கொள்ளப்படும்.

கதிர்காமத்தில் ஆகம முறைக்குப் புறம்பான பூசை முறை இடம்பெறுகிறது. முருகனுக்குப் பூசை செய்யும் பூசகர் கப்புறாளை என அழைக்கப்படுவார். அவர் வாயைத் துணியினால் கட்டி, மௌனபூசை செய்வார்.

கதிர்காமத்தின் பெரிய கோயில் முருகனுக்குரியது. அது தெற்கு நோக்கி அமைந்திருக்கின்றது. கோயில் மூலஸ்தான வாசல் ஒருபோதும் திறக்கப்படுவதில்லை. அது எப்பொழுதும் திரையால் மறைக்கப்பட்டிருக்கும்.

கதிர்காம ஆலயத்துக்கு வலப் பக்கத்தில் மாணிக்கப் பிள்ளையார் ஆலயமும், இடப் பக்கத்தில் வீதிக்கு வெளியே, தெய்வயானை அம்மன் ஆலயமும் உள்ளன. வள்ளியம்மன் ஆலயம், முருகன் ஆலயத்துக்கு எதிரே அமைந்துள்ளது.

கதிர்காமத்தில் நடைபெறும் திருவிழாக்களின் போது, மூலஸ்தானத்தில் இருக்கும் இயந்திரத்தகடு வைக்கப்பட்ட பெட்டியை, அலங்கரித்த யானை மீது எழுந்தருளச் செய்து, வீதிவலம் வருவது வழமையாகும். சித்திரை வருடப்பிறப்பு, ஆடி மகோற்சவம், திருக்கார்த்திகை முதலிய நாள்களில் அங்கு திருவிழாக்கள் நடை-பெறுகின்றன. ஆடி மாதத்தில் நடைபெறும் உற்சவகாலத் திருவிழாக்களே அவற்றுட் சிறப்பானவை. திருவிழாக் காலங்களில் அடியார்கள் தேனுந் தினைமாவும் கொண்டு மாவிளக்கேற்றியும், காவடி எடுத்தும், கர்ப்பூர தீபச்சட்டி ஏந்தியும் முருகப் பெருமானை வழிபடுவர்.

கதிர்காமம் செல்வோர், கதிர்காம முருகனை வழிபட்ட பின், செல்லக் கதிர்காமத்திற்குச் செல்வர். அங்கு மாணிக்கப் பிள்ளையாரை வணங்கிய பின், கதிரை மலை உச்சியில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானை வழிபட்டு, யாத்திரையின் முழுப்பயனையும் பெறுவர்.

திருப்புகழில் அருணகிரிநாதர் போற்றிப் பாடிய கதிர்காம முருகனை, நாமும் வாழ்வில் ஒருமுறையாவது சென்று தரிசிக்க வேண்டும்; முருகன் அருள் பெற வேண்டும்.

இறவாமல் பிறவாமல்
எனையாள்சற் குருவாகிப்
பிறவாகித் திரமான
பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே
குகனேசற் குமரேசா
கறையானைக் கிளையோனே
கதிர்காமப் பெருமாளே.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக**

1. இலங்கையில் உள்ள முருகன் ஆலயங்கள் மூன்றின் பெயர்களைத் தருக.
2. கதிர்காமம் என்பதன் பொருள் யாது?
3. கதிர்காமத்தில் நடைபெறும் பூசை முறையைப் பற்றிக் குறிப்பிடுக.
4. கதிர்காமத் தலத்தின் மீது திருப்புகழ் பாடியவர் யார்?
5. கதிர்காம ஆலயத்தின் தீர்த்தம் எது?

## செயற்பாடு

1. கதிர்காம ஆலயத்தில் நடைபெறும் பூசை முறைகள் என்ற தலைப்பில் இரண்டு நிமிடப் பேச்சொன்றை வகுப்பறையில் நிகழ்த்துக.

### பாடச்சுருக்கம்

- இலங்கையில் உள்ள பழமை வாய்ந்த முருகன் ஆலயங்களுள் கதிர்காமமும் ஒன்றாகும்.
- கதிர்காம ஆலயத்தில் ஆகம முறை சாராத வழிபாடு நிகழ்த்தப்படுகின்றது.
- கதிர்காம ஆலயத்தின் தீர்த்தம் மாணிக்க கங்கையாகும்.
- கதிர்காம ஆலயத்தின் மீது அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ளார்.

# 21 இலங்கையில் உள்ள சமயங்கள்

இலங்கையில் உள்ள மக்களால் சைவம், பௌத்தம், கிறிஸ்தவம், இஸ்லாம் என்னும் சமயங்கள் பின்பற்றப்படுகின்றன. சமயங்கள் யாவும் மக்களை நல்வழிப்படுத்துவன. சமயங்கள் வேறுபட்டவையாக இருந்தாலும் அவற்றிற்கிடையே சில பொதுவான பண்புகளும் காணப்படுகின்றன.

சைவ சமயத்தவரின் முழுமுதற்கடவுள் சிவபெருமான். சைவ சமயத்தவர்கள் வேதம், ஆகமம் என்னும் இரண்டையும் முதன்மை நூல்களாகக் கொள்கின்றனர். அச்சமயத்தினர் கோயில்களுக்குச் சென்று சிவனை வழிபடுவர்.

பௌத்த மதத்தை தோற்றுவித்தவர் கௌதம புத்தர். திரிபீடகம், தம்மபதம் என்பன பௌத்த சமயத்தின் முதன்மை நூல்களாகும். அந்தச் சமயத்தவர்களின் வழிபாட்டுத் தலம் பௌத்த விகாரைகளாகும்.

கிறிஸ்தவர்கள் பரமபிதாவை வழிபடுவர். அத்துடன் மீட்பரான இயேசு கிறிஸ்துவையும் வழிபடுகின்றனர். பைபிள் என்பது அவர்களது முதன்மை நூலாகும். கிறிஸ்தவர்களின் வழிபாட்டு இடம் தேவாலயம் என அழைக்கப்படுகின்றது.

இஸ்லாம் சமயத்தவரின் வழிபாட்டுக்கு உரியவர் அல்லாஹ் ஆவர். அவர்களது முதன்மை நூல் திருக்குர்ஆன் என அழைக்கப்படும். அச்சமயத்தவர்களது வழிபாட்டுக்குரிய இடம் பள்ளிவாசல் எனப்படும்.

இலங்கையராகிய நாம், எமது சகோதர இனத்தவர்களது சமய, கலாசார அம்சங்களை அறிந்து, அவற்றுக்கு மதிப்பளிப்பது நல்ல பண்பாகும்.

## பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. சைவ சமயத்தவர்களின் முதல் நூல்கள் எவை?
2. பௌத்த சமயத்தவரின் வழிபாட்டிடம் எவ்வாறு அழைக்கப்படும்?
3. கிறிஸ்தவர்களுடைய முதன்மையான நூல் எது?

## செயற்பாடு

**02. பின்வரும் அட்டவணையை நிரப்பி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.**

| சமயங்கள் | வழிபடப்படுபவர் / சமய முதல்வர் | முதன்மையான நூல் | வழிபடும் இடம் |
|---|---|---|---|
| 1. சைவம் | ........................ | ........................ | ........................ |
| 2. பௌத்தம் | ........................ | ........................ | ........................ |
| 3. கிறிஸ்தவம் | ........................ | ........................ | ........................ |
| 4. இஸ்லாம் | ........................ | ........................ | ........................ |

## பாடச்சுருக்கம்

- இலங்கையிலுள்ள மக்கள் சைவம், பௌத்தம், கிறிஸ்தவம், இஸ்லாம் என்னும் சமயங்களைப் பின்பற்றுகின்றனர்.
- ஒவ்வொரு சமயத்திற்கும் சமய முதல்வர் அல்லது வழிபாட்டுக்கு உரியவர், முதன்மை நூல், வழிபடும் இடங்கள் ஆகியன உள்ளன.
- இலங்கையராகிய நாம் சகோதர இனத்தவர்களது சமய, கலாசார விடயங்களுக்கு மதிப்பளிக்க முன்வர வேண்டும்.

# சைவநெறி தரம் - 6 பாடத்திட்டம்

1.0 அன்றாட வாழ்க்கையில் இறை சிந்தனையுடன் சமய ஒழுகலாறுகளைக் கடைப்பிடிப்பர்.

1.1 கடவுள் ஒருவரே உண்மை என்பதையும், எல்லாச் செயல்களுக்கும் அவரே காரணம் என்பதையும் ஏற்று, வாழ்வில் பின்பற்றுவர்.

- விநாயகர்
  முதலில் வழிபட வேண்டியவர் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தல்.
- கடவுள்
  கடவுள் ஒருவரே உண்மை என்பதை ஆதாரங்களினூடாக விளக்குதல்.
  - கதை
  - உபதேசம்
  - வினாவிடை

1.2 நாளாந்தக் கடமைகளை இறை சிந்தனையுடன் செய்வர்.

- வீட்டில் சைவம்
  - வீடுகளில் அன்றாடம் கடைப்பிடிக்கும் சைவப் பழக்க, வழக்கங்கள் பற்றிக் குறிப்பிடல்.
  - விசேட தினங்களில் பின்பற்ற வேண்டிய அம்சங்களை அறிமுகம் செய்தல்.

1.3 சமய ஒழுகலாறுகளையும், வழக்காறுகளையும் பின்பற்றுவர்.

- நித்திய கருமவிதி
  . நித்திய கருமங்கள் பற்றி விளக்குதல்
  - இறைவனை நினைத்தல்
  - சிவசின்னங்கள் தரித்தல்
  - தமக்காகவும் பிறருக்காகவும் பிரார்த்தனை செய்தல்
  - தருமம் செய்தல்
  - புனிதம் பேணல்
  - உணவு உண்ணுமுன் திருமுறை ஓதுதல்
- சமய விழுமியங்கள்
  . விழுமியப் பண்புகளைக் கடைப்பிடித்தல்
  - உண்மை பேசுதல்
  - அன்பு செலுத்துதல்
  - பெரியோரைக் கனம்பண்ணுதல்
  - பகிர்ந்துண்ணல்
  - தன்னம்பிக்கையை வளர்த்தல்
  (இவற்றினை விளக்கம், கதைகள் மூலம் குறிப்பிடல்)

1.4 வாழ்க்கை முன்னேற்றத்திற்காக வாழ்வியல் சடங்குகளை அறிந்து, அவற்றை முறைப்படி பின்பற்றுவர்.

- வாழ்வியல் சடங்குகள்
  - பிறப்பு முதல் ஏடு தொடக்கல் வரையிலான சடங்குகள் பற்றியும், அவற்றின முக்கியத்துவம் பற்றியும் விளக்குதல்.
- விரதங்கள்
  - விரதங்களின் அடிப்படை அம்சங்கள் பற்றி அறிதல்
- பண்டிகைகள்
  - பண்டிகைகள் பற்றி அறிதல் அவை பற்றி விளக்குதல்
  (சித்திரை மாதத்தில் கொண்டாடுபவை)

2.0 சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றை வாழ்வில் பின்பற்றுவர்.

2.1 நாயன்மாரின் வரலாறுகளினூடாக, அவர்களது சமய நம்பிக்கையையும் பக்தியையும் உணர்ந்து, அவற்றின் வழி ஒழுகுவர்; அவர்களது பக்தியின் சிறப்பை எடுத்துரைப்பர்.

- மென் பக்தி, வன் பக்தியாளர்களுடைய, வரலாற்றுக் கதைகளில் உள்ள முக்கிய அம்சங்களை வெளிப்படுத்தல்

● திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

● கண்ணப்ப நாயனார்

3.0 திருமுறைப் பாடல்களையும், தோத்திரப் பாடல்களையும் பண்ணோடும், பக்தியோடும் பாடுவர்.

3.1 பஞ்ச புராணங்கள், தோத்திரப் பாடல்கள் பற்றி அறிந்து, அவை பற்றி விளக்குவர்; பாடுவர்.

● பஞ்ச புராணங்கள்

- பஞ்ச புராணங்களைப் பாடும் ஒழுங்கு முறையை அறிதல்
- பாடல் பாடியவர், பாடப்பட்ட சந்தர்ப்பம், தலம், பாடல் அடங்கியுள்ள திருமுறை ஆகியவற்றைக் குறிப்பிடல்
- பாடலுக்குப் பொருள் குறிப்பிடல்; அருஞ் சொற்களை விளக்குதல்
- பொழிப்புரை எழுதுதல், பாடல்களை மனனம் செய்தல்; பிழையறப் பாடுதல்; பண்ணோடு, பொருள் உணர்ந்து பாடுதல், கூச்சமின்றிப் பாடுதல் என்பவற்றின் அவசியத்தைக் குறிப்பிடல்

தேவாரங்கள் (06)

01. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்
‘‘ தோடுடைய செவியன்...................”
‘‘ தொண்டரஞ்சு ..............................”

02. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்
‘‘கூற்றாயினவாறு.............................”
‘‘பூவினுக்கருங்கலம்.........................”

03. சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்
‘‘பித்தா பிறைசூடி...........................”
‘‘பொன்னார்மேனியனே.....................”

04. மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம்
‘‘பூசுவதும் வெண்ணீறு.....................”

05. திருவிசைப்பா
‘‘ஒளிவளர் விளக்கே........................”

06. திருப்பல்லாண்டு
‘‘சீரும் திருவும் பொலிய................”

07. பெரியபுராணம்
‘‘உலகெலாம்.................................”

● தோத்திரங்கள்

01. திருப்புகழ்
‘‘இசைந்தவேறும்............................”

4.0 சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவர்.

4.1 ஆலயம் என்பதன் பொருள் விளக்கத்தைப் பெறுவர்.

● ஆலய வழிபாடு

- ஆலயத்துக்குச் செல்லுமுன் பின்பற்ற வேண்டிய ஒழுங்கு முறைகளைப் படிமுறையாக விளக்குதல் அவற்றைச் செயற்படுத்த வழிகாட்டுதல்.
- பூசைப் பொருட்களையும் அவற்றைச் சேகரிக்கும் முறைகளையும் எடுத்துச் செல்லும் முறைகளையும் விபரித்தல்.

- ஆலயத்தினுள் கடைப்பிடிக்கவேண்டிய ஒழுங்கு முறைகளைக் குறிப்பிடல்.
- வழிபாட்டு ஒழுங்கு முறைகளையும் அவற்றின் முக்கியத்துவத்தையும் குறிப்பிடல்.
- ஆலயத் தொண்டுகள், அவற்றில் அடங்கும் செயற்பாடுகள் பற்றி அறிதலும் அவற்றில் ஈடுபட வழிப்படுத்தலும்.
- ஆலய வழிபாட்டின் முக்கியத்துவத்தைக் குறிப்பிடல்.

5.0 சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவர்களை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

5.1 நாயன்மார் (நால்வர்) வரலாறுகளை அறிந்து, அவர்கள் செய்த சமயத் தொண்டுகளை மனங்கொண்டு, அவற்றுக்கு மதிப்பளிப்பதுடன் அவற்றைத் தமது வாழ்வில் கடைப்பிடிப்பர்.

- நால்வர்
  - நாயன்மார்கள் நால்வரின் திருத்தொண்டுகளையும், வரலாறுகளையும் அறிமுகஞ் செய்தல்.
  - திருத்தொண்டுகளைத் தாமும் செய்ய வேண்டும் என்ற மனப்பாங்கினை ஏற்படுத்தல்.

5.2 ஈழத்தில் சமயம் வளர்த்த பெரியார்களையும் அவர்களது பணிகளையும் அறிந்து, மதிப்பளிப்பர்.

- அன்னியர் ஆட்சிக் காலத்திலும் அதன் பின்பும் ஈழத்தில் சமயத்தைப் பாதுகாத்து, வளர்த்த பெரியார்கள் பற்றிய விபரங்களை அறிதல். அவர்களது பணிகளுக்கு மதிப்பளித்தல்.

- ஈழத்துச் சமயப் பெரியார்கள்
  - ஞானப்பிரகாச முனிவர்
  - ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்

6.0 சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளங்கி, வெளிப்படுத்துவர்.

6.1 சைவ சித்தாந்தத் தத்துவத்தின் அடிப்படை அம்சங்களை இனங்காண்பர்; விளக்கம் பெறுவர்.

- முப்பொருள்
  - பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் பற்றி அறிமுகம் செய்தல்.

7.0 ஈழத்து சைவ மரபினைப் பேணிக்காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

7.1 ஈழத்து சைவ ஆலய வகைகளையும், அவற்றின் சிறப்பம்சங்களையும் விபரிப்பர்.

- ஈழத்து சைவ மரபு
  - ஈழத்திலுள்ள விநாயகர், சிவன், முருகன் ஆலயங்கள் பற்றிய பொதுவான விளக்கத்தை வழங்கல்
  - ஆலயம் தொடர்பான பல்வேறு அம்சங்களைக் குறிப்பிடல்
- விநாயகர் ஆலயம் அறிமுகம்
- சிவாலயம் - திருக்கோணேச்சரம்
- முருகன் ஆலயம் - கதிர்காமம்

8.0 பிற சமயங்கள் பற்றி அறிந்து, அவர்களது சமய, கலாசார, பண்பாடுகளுக்கு மதிப்பளிப்பர்; வேற்றுச் சமய மக்களுடன் சுமுகமான உறவை வளர்ப்பர்.

- இலங்கையில் உள்ள சமயங்கள் அறிமுகம்

# සිංහල වර්ණ මාලාව

| | | | | | |
|---|---|---|---|---|---|
| අ | ආ | ඇ | ඈ | ඉ | ඊ |
| උ | ඌ | ඍ | ඎ | ඏ | ඐ |
| එ | ඒ | ඓ | ඔ | ඕ | ඖ |
| (අ)ං | (අ)ඃ | | | | |
| ක | ඛ | ග | ඝ | ඞ | ඟ |
| ච | ඡ | ජ | ඣ | ඤ | ඦ |
| ට | ඨ | ඩ | ඪ | ණ | ඬ |
| ත | ථ | ද | ධ | න | ඳ |
| ප | ඵ | බ | භ | ම | ඹ |
| ය | ර | ල | ව | | |
| ශ | ෂ | ස | හ | ළ | ෆ |

நம் நாட்டு இளஞ் சந்ததியினரின் நலன் கருதி நம் அரசு உங்களுக்கு வழங்கும் இந்நூலை அடுத்த ஆண்டும் உங்கள் சகோதரர்களுக்கு வழங்கத்தக்க வகையில் வைத்துப் படியுங்கள்.

பாடசாலைப் பெயர் : ..............................................................................

| ஆண்டு | பாடநூலைப் பெற்றுக் கொண்ட மாணவர் பெயர் | வகுப்பு | வகுப்பாசிரியரின் கையொப்பம் |
|---|---|---|---|
| 2011 | ............................................... | ............. | .............................. |
| 2012 | ............................................... | ............. | .............................. |
| 2013 | ............................................... | ............. | .............................. |
| 2014 | ............................................... | ............. | .............................. |
| 2015 | ............................................... | ............. | .............................. |

